This Book is Published with the Financial Assistance of Tirumala Tirupati Devas -thanams Under Their Scheme "Aid to Publish Religious Books"

முனைவர் பொன். சௌரிராஜன்

வெளியீடு :

தேனகம்

நீகரிகா அபார்ட்மெண்ட்சு
காயத்ரி நகர்
திருப்பதி—517502.

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஸ்ரீ வேங்கடேச வசனங்கள் |
| ஆசிரியர் | : | பொன். சௌரிராஜன் |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு |
| முதற் பதிப்பு | : | நவம்பர், 1999 |
| விற்பனை உரிமை | : | எஸ். சந்திரா |
| வெளியீடு | | தேனகம்<br>நீகரிகா அபார்ட்மெண்ட்சு<br>காயத்ரி நகர்<br>திருப்பதி—517502. |
| சென்னையில் நூல் கிடைக்குமிடம் | : | பாரி நிலையம்<br>எண். 184, பிரகாசம் ரோடு<br>சென்னை—600 001. |
| நூலின் அளவு | : | 148 × 210 மி.மி. டெம்மி |
| தாள் | : | 13.6 kg. வேஷசாய் வெள்ளைத்தாள் |
| எழுத்து | : | 12 புள்ளி |
| கட்டு மானம் | : | சாதா அட்டை பைண்டிங் |
| மொத்தப் பக்கங்கள் | : | 88 |
| பிரதிகள் | : | 1000 |

---

**விலை : ரூ. 27-00**

---

| | | |
|---|---|---|
| அச்சிட்டோர் | : | வெற்றி அச்சகம்<br>91, டாக்டர் பெசன்ட் சாலை<br>இராயப்பேட்டை<br>சென்னை—600 014.<br>தொ. எண் : 8550759 |

பேராசிரியர் கே. சர்வோத்தம ராவ் எம் ஏ. பிச். டி
தெலுங்குப் புலம்
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி—2

பேராசிரியர் பொன். சௌரிராஜன் அவர்களை சென்ற முப்பதாண்டுகளாக நன்கு அறிவேன். தமிழ் மொழியில், தமிழ் இலக்கியத்தில் ஒரு குறிப்பிடத் தக்க மிகச் சிறந்த அறிஞர்; ஆராய்ச்சியாளர் அவர். பக்தி இலக்கியம் குறித்து அவர் எழுதியனவும், ஆய்ந்தனவும் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு மைல் கல், தமிழிலும் தெலுங்கிலும். இவர் பல நூல்கள் எழுதியுள்ளார். 'பாலபாரதி' என்னும் சிறுவர் நூல் வரிசையில் 'நம்மாழ்வார்' என்னும் இவர் தெலுங்கில் எழுதிய நூலைத் திருமலை திருப்பதி தேவத்தானம் அச்சிட்டு பக்தர் அனைவருக்கும் வழங்கிவருகிறது. இப்போது இவர் எழுதியுள்ள இந்த நூல் தாள்ளப் பாக்கக் கவிஞர்களைப் பற்றியது.

தெலுங்கு இலக்கியத்தில் தாள்ளப் பாக்கக் குடும்பமே ஒரு கவிஞர் குடும்பம். தெலுங்கு இலக்கியத்திற்கு அவர்கள் அளித்த பங்கு தலை சிறந்தது. அவர்கள் வைணவத்தைத் தழுவி திருவேங்கடவன், திருவேங்கடவனுக்கு நிகழும் திருவிழா பற்றி நிறைய பாடியுள்ளனர். அவர்களுள் பெத்த திருமலாசார்யா பெரிதும் கற்றறிந்த ஒரு கவிஞர். அவர் பல நூல்கள் எழுதியுள்ளார். பல இலக்கிய வடிவங்களைப் பயன்படுத்தியுள்ளார். உதாகரணம், யட்சகானம், சதகம், சங்கீர்த்தனம் முதலியன அவற்றுள் குறிப்பிடத்தக்கன.

'வசன பிரகிரியா' என்பது கன்னட இலக்கியத்தில் அனைவரும் அறிந்த ஓர் வடிவம். வீரசைவக் கவிஞர்கள் எழுதிய வசனங்கள் கன்னட நாட்டில்

எப்போதும் போற்றப்பெறுவன. இங்கு வசன இலக்கிய மேதைகள் வீரசைவத்தை இந்த வசன இலக்கிய வடிவின் ஆற்றலை நோக்கி உணர்ந்தனர். அப்படித் தான் வைணவ சமயக் கவிஞராகிய கிருஷ்ணமாசாரியா சிம்மாசலத்தில் குடி கொண்டுள்ள இறைவனைப் புகழ்ந்து முதன் முதல் தெலுங்கில் வசன இலக்கியம் எழுதினார். வசன சங்கீர்த்தனங்கள் 4 நூல்கள் எழுதினார். பெத்த திருமலாசார்யா எழுதிய ஸ்ரீ வேங்கடேச வசனங்கள் 'வைராக்கிய வசன மாலைகள்' என்று பெரும் புகழ் பெற்றனவாகும். இந்த வசனங்களை, வைணவ சமுதாய வாழ்வியல் தத்துவங்களையும் தருமங்களையும் பற்றிய கருவூலங்கள் எனலாம்.

பேராசிரியர் சௌரிராஜன் தெலுங்கிலிருந்து இந்த வசனங்களில் சிறந்தன சிலவற்றைத தமிழில் தந்துள்ளார். தமிழ் வைணவ பக்தி இலக்கியத்திற்கு இது இன்னொரு செல்வமாகும் இந்த வேங்கடேச வசனம் ஒவ்வொன்றுக்கும் திருவாய் மொழி தேவாரம், ஆசாரியர் அருளிச் செயல்கள் முதலியவற்றிலிருந்து தக்க தலைப்புகளைத் தந்து அந்தந்த வசனத்தின் அடிக்கருத்தைப் புலப்படுத்தியுள்ளார். சில வசனங்களுக்கு விளக்கங்களும், உரைகளும் அவர் இதில் எழுதியுள்ளார்.

இவருடைய இந்தத் தெலுங்கு வசன தமிழ் மொழியாக்கம் எளிமையாக உள்ளது; இனிமையாகவும் உள்ளது. தமிழ் அறிஞர்கள் சௌரிராஜனின் இந்த ஆர்வத்தைப் போற்றி வரவேற்பர் என நம்புகிறேன்; மேலும் மேலும் தாளப் பாக்கக் கவிஞர் நூல்கள் பலவற்றை அவர் தமிழ் ஆக்கம் செய்ய ஊக்குவிப்பர் என்றும் எண்ணுகிறேன்.

கே. சர்வோத்தம ராவ்

1966-இல் ஆந்திர மாநிலம் சித்தூர் அரசினர் கலை அறிவியல் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளனாகச் சேர்ந்தபோது தெலுங்கு கற்க வேண்டிய சூழ்நிலை இயல்பாக உருவாயிற்று. அரசினர் ஆண்டுதோறும் பிறமொழியார் தெலுங்கு கற்க வேண்டும் என்ற மாநில அரசுச் சட்டமும் வற்புறுத்தியது. சூழ்நிலை காரணமாகவும், மாநில அரசு சட்டம் காரணமாகவும் தெலுங்குமொழி பயின்றேன். மாநில அரசின் தேர்வும் எழுதித் தேறினேன்.

தெலுங்கில் அப்போது என் மனத்தைக் கவர்ந்த கவிஞர் வேமனர். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் 'உமர்கய்யாம்' போல எளிமையாகவும், இனிமையாகவும், கருத்துச் செறிவுடனும் வேமனர் பாடல் சிலவற்றைத் தமிழாக்கம் செய்ய வேண்டும் என்ற அவா என்னுள் எழுந்தது. அவ்வப்போது ஓரிரு பாடல்களை மொழியாக்கமும் செய்தேன். ஆனால் இன்றும் அந்த அவா நிறைவு பெறவில்லை.

பின்னர் 1971-இல் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையில் ஆசிரியனாகச் சேர்ந்தேன். நண்பர் பேராசிரியர் கே. சர்வோத்தமராவ் நட்பு பெற்றேன். தெலுங்குப் பேராசிரியராகிய அவர் தமிழ், கன்னடம், சமக்கிருதம் ஆகிய மொழிகளிலும் வல்லவர். என் சிறுகதை சிலவற்றைத் தெலுங்கிலும், கன்னடத்திலும் மொழி பெயர்த்துத் தெலுங்கு, தமிழ் இதழ்களில் வெளியிட்டுத் தெலுங்கர்க்கும் கன்னடர்க்கும் அறிமுகப்படுத்திய பெருமை அவர்க்கே உரியது, அவருடன் கலந்து பல்லாண்டு பழகிய போது சங்க இலக்கியத்தில் சிறந்த அகப்புறப் பாடல் சிலவற்றைத் திணை, துறை குறிப்புகளோடு தெலுங்கு மொழியில் வழங்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. அது என் கடமையாக

ஈடேறவில்லை. தெலுங்கு மண்ணில் தமிழ்ப் பேராசி யனாகப் பணியேற்ற நான் அந்தக் கடமையை இன்னும் நிறைவேற்றவில்லை.

இதற்கு இடையில் சில ஆண்டுகள் திருமலை திருப்பதி தேவத்தான தொடர்பு ஏற்பட்டது. ஓய்வு பெற்றபின் ஆழ்வார் திவ்விய பிரபந்த திட்டத்துறை சிறப்பு அலுவலராக திருமலை திருப்பதி தேவத் தானத்தார் என்னை நியமித்தனர். ஆழ்வார், ஆசாரி யர்கள் இந்திய தத்துவ ஞானத்திற்கும் தமிழ் இலக்கியத்துக்கும் ஆற்றிய பணி எனக்குத் தெளிவா யிற்று. அவ்வகையில் அன்னமய்யாவின் கீர்த்தனை கள் என் நெஞ்சைக் கொள்ளை கொண்டன. பேராசிரியர் கே. சர்வோத்தமராவுடன் இணைந்து 'அன்னமய்யா ஓர் அறிமுகம்' என்னும் நூல் ஒன்று எழுதித் தேவத்தானத்தார் வெளியிட்டு வழங்குமாறு செய்தோம்:

அன்னமய்யாவின் மகனார் பெரிய திருமலா சாரியார் எழுதிய பல நூல்கள் பற்றி சர்வோத்தம ராவ் அவர்கள் அடிக்கடி எடுத்து எனக்குச் சொல் வார்கள். ஒருநாள் பெரிய திருமலாசாரியர் ஸ்ரீ வேங்கடேச வசனங்கள் சிலவற்றைப் படித்துக் காட்டினார்கள். முற்றுருவக நடையில் வைணவ தத்துவம், இதிகாச புராணங்கள், வாழ்க்கை நெறி முறைகள் பற்றியெல்லாம் அழகாக அவை அமைந் திருந்தன. அவற்றைத்தமிழாக்கம் செய்து தமிழர்க்கு அறிமுகப்படுத்த வேண்டும் என்ற ஆசை எழுந்தது. திரு ராவ் அவர்களும் அவ்வகையில் என்னை ஊக்கப் படுத்தி உதவினார். சில வசனங்கள் தமிழாக்கம் ஆயின. அவற்றோடு ஒத்த திவ்வியப்பிரபந்த, தேவார, தாயுமானவர், பட்டினத்தார் பாடல் சில வற்றையும் அந்தந்த வசனங்களுக்கு முன்னும் பின்னும் சேர்த்து ஒப்பிட்டு விளக்கமும் எழுதினேன்.

அவைதான் இன்று 'ஸ்ரீ வேங்கடேச வசனங்கள்' என்னும் நூலாக உங்கள் கையில் உலா வருகிறது.

இதனை அச்சிடுவதற்கான பண உதவியினைத் திருமலை திருப்பதி தேவத்தான அறிஞர் குழு எனக்கு வழங்கியது. அதற்கும் திருமலை திருப்பதி தேவத்தான மேலாண்மை அதிகாரிகளுக்கும் சப்தகிரி ஆசிரியர் டாக்டர் N. S. ராமமூர்த்தி அவர்களுக்கும் பெரிதும் நன்றியுடையேன்.

வெற்றி அச்சக உரிமையாளர் திரு. வெங்கடாசலம் ஓர் அச்சக நிர்வாகி(யாகிய) பாவை அச்சகத்தாரால் எனக்கு அறிமுகமானார். வளர்பிறை போல் அந்த அறிமுகம் நட்பாக வளர்ந்து வருகிறது. கீதையில் எல்லாவற்றையும் விட்டுவிட்டு என்னையே சரணடை உன்னை நான் காப்பாற்றுவேன் என்று கண்ணன் தன் கீதையின் கடைசி சுலோகத்தில் கூறுகிறான். அதுபோல் எல்லாப் பொறுப்பையும் தானே ஏற்றுக் கொண்டு தாள் வாங்குதல், அச்சிடல், பைண்டிங் செய்தல், அட்டைப்பட ஓவியம் உருவாக்கல், பிறகு விற்பனைக்கும் உரிய வழிமுறைகளைக் கூறி உதவுதல் ஆகிய எல்லா வகையானும் அவர் உதவி வருகிறார். அவர் கைமாறு கருதாது ஆற்றும் இந்த உதவிகளுக்குப் பெரிதும் கடப்பாடுடையேன்.

தேனகப் பதிப்பகத்தார் அச்சிடுதலிலும் பாரி நிலையத்தார் விற்பனையிலும் தொடர்ந்து உதவி வருகின்றனர். பாரி திரு. செல்லப்பனார் அவர்களுக்கு 'நன்றி' என்று சொன்னால் போதாது. அவர்க்கு என் வணக்கமும் வாழ்த்தும் கூறுவன். என்னை எழுத்தாளனாகத் தோற்றுவித்தார் பேராசிரியர் மு. வரதராசனார்; எழுத்துலகில் என்னை வளர்த்தவர் பாரி செல்லப்பனார் ஆவர் என் நெஞ்சம் திறப்போர் அவர்களைக் காண்பர்.

பொன். சௌரிராஜன்

# ஸ்ரீ வேங்கடேச வசனங்கள்

ஆந்திர இலக்கிய வரலாற்றில் சிறப்பாக இடம் பெறும் கலைக் குடும்பங்கள் பல உள்ளன. அவற்றுள் ஒன்று தாள்ளப் பாக்க பரம்பரை. இந்தக் கலைக் குடும்பத்தின் மூலவர் தாள்ளப்பாக்க அன்னமய்யர். நாளுக்கு ஒன்று வீதம் திருவேங்கடவன் பற்றி முப்பத்து இரண்டாயிரம் கீர்த்தனைகள் பாடிய மாபெரும் கவிஞர் அன்னமய்யர்.

அன்னமய்யருக்கு, மனைவியர் இருவர். முதல் மனைவியின் பெயர் திருமலம்மா; இரண்டாவது மனைவி அக்கலாம்பா. இரண்டாவது மனைவியின் குமாரரே பெரிய திருமலாசாரியார் ஆவர் இவர் 1458-இல் பிறந்து 1554 வரை ஏறக்குறைய 90 ஆண்டுகள் வாழ்ந்தார். இவருக்குப் பல பெயர்கள் உண்டு. பெரிய திருமலைய்யா, பெரிய திருமலை அய்யங்கார், அன்னய்யா, திருமலை ஆர்யா, திம்மய்யா, திம்மய்யார்யா, திருமலாசார்யா, திருமலை தேசிகர், வேங்கடப்பதி யோகி, தாள்ளப் பாக்கத் திருமலைய்யா, திருமலை அய்யங்கார் எனச் சிறப்புப் பெயர்கள் பல பெற்றவர் இவர்.

பெரிய திருமலாசார்யா அரவம்சம், வேங்க டேஸ்வர பிரபாத ஸ்தவம், சிருங்கார சங்கீர்த்தனை கள், அத்யாத்மிக சங்கீர்த்தனங்கள், வேங்கடேசுர வசனங்கள், சிருங்கார தண்டகம், சக்கரவாள மஞ்சரி, சிருங்காரவிருத்த சதகம், வேங்கடேசுவர

உதாகரணம், நீதிசீச சதகம், சுதர்சன ரகட, பகவத் கீதை தெலுங்கு வசனம், சங்கீர்த்தன லட்சனா வியாக்ய முதலிய நூல்கள் இயற்றினார். அவற்றுள் வேங்கடேச வசனங்கள் சிலவற்றைத் தக்க விளக்கங் களோடு தமிழில் எடுத்துரைப்பது இந்த நூல்.

## வசனம்-விளக்கம்

வசனம் என்ற சொல் பேச்சு, பேசுதல், வெளி யிடல் என்ற பொருள் தருவது. ஆனால், வடமொழி யில் எதுகை மோனையோடு விளங்கும் 'கத்யா' என்று அழைக்கப்பெறுகிற உரைநடை அமைப்பு வேறு. இது வேறு. இது ஒரு தனிவகை இலக்கியம். இந்த வகை இலக்கியம் கன்னடத்திலிருந்து தெலுங் குக்கு வந்ததாக இலக்கிய ஆராய்ச்சியாளர் கூறுகின் றனர். கன்னடக் கவிஞராகிய பசவண்ணர், '(பொரு ளாசையால்) பிறர் வசனங்களை (பேச்சுக்களை) புகழ்ந்துரைப்பதால் கர்மவினை அகலாது; (அரு ளாளர்) இனிய வசனமே எல்லா ஜபமும் ஆகும்'— என்று வசன இலக்கியத்திற்கு ஒரு விளக்கம் கொடுத் தார். சித்தராமா என்னும் வீரசைவர் 68,000 வசனங் கள் தாம் இயற்றியதாகக் கூறுகிறார். அவர், 'ஒரு வசன பாராயணத்துக்கு வியாச புராணம்கூட ஈடாகாது' என்றும் கூறினார். இவர்கள் தரும் விளக்கங்களிலிருந்து, 'வசனம் என்பது செய்யுள் அன்று; உரைநடை விளக்கம் ஒரு வடிவமே' என்பது புலனாகும். இந்த வசனங்கள் பாடப்பெறுவதால் 'கீதம்' என்னும் பெயர் பெற்றன. அதனால் வசனம் எழுதுவோரும், அதனைப் பாடுவோரும் 'வசன கீதம்' என்று இதனை அழைத்து வரலாயினர். இங்குக் 'கீதம்' என்ற சொல் செய்யுளைக் குறிப்பது அன்று.

செய்யுள் போலச் செறிவானவை அல்ல வசனங்கள்; ஆனால், அதே நேரத்தில் உரைநடை போன்று அவ்வளவு தெளிவானவையும் அல்ல. பொதுவாக நோக்கும்போது எதுகை மோனையோடு கூடிய உரைநடைக்கும் (கத்யம்) செய்யுளுக்கும் (பத்யம்) இடைப்பட்ட ஒருவகையினது இந்த வசன இலக்கியம் ஆகும்:

இந்த வசன இலக்கியத்துக்குத் தமிழில் உள்ள தேவாரமே மூலம் என்பர் கன்னடப் பேரறிஞர் D. L. நரசிம்மாச்சாரி. உரைநடைக்குத் தாளம் கற்பித்து அதற்குப் பாட்டின் இயல்பை உருவாக்கியதால் வசனங்கள் தோன்றின என்பது அவர் கருத்து.

திரு. L. பசவராஜா என்பவர் வேதம்; உபநிடதம், பிராமஹ்மணங்கள் ஆகியவற்றுள் உள்ள உரைநடையே இத்தகைய வசனங்களுக்கு மூலம் என்று எடுத்துரைத்தார்.

முனைவர் சிதானந்த மூர்த்தி திரிபதி (சிந்து போன்றது) என்னும் யாப்பே வசனங்களுக்கு மூலம் என்பர். கன்னடத்தில் பல வசனங்களை அலகிட்டால் திரிபதி யாப்பமைதி கொண்டிருத்தலே இவர் இவ்வாறு கருதக் காரணமாயிற்று. இம்மூன்று கருத்துக்களுள் திரு L. பசவராஜா கூறும் கருத்தே மிகப் பொருத்தமானதாகத் தோன்றுகிறது.

வசனம் என்றால் என்ன என்று இதுவரை பல விளக்கங்கள் கூறப்பெற்றன. அதைவிட எந்தச் சூழ்நிலையில் இந்த வசன இலக்கியம் உருவாகியது என்று காண்பதும் நன்று.

வேதம், உபநிடதம், பிராஹ்மணம் முதலியன சிலர்க்கே உரியனவாக இருந்தன. இதிகாச புராணங்கள் கற்றவர்க்கே பயன்தருவன. இவற்றை

எண்ணியும் மேலும் சமூகத்தில் நிகழும் சீர்கேடுகள் சிலவற்றைப் பார்த்தும் அனைவருக்கும் பயன்தரு மாறு சமய சம்பந்தமான உண்மைகளை உரைக்க வேண்டும் என்று துணிந்த சான்றோர் சிலர், இந்த வசனவகை இலக்கியம் தோன்றக் காரணம் ஆயினர்.

இத்தகு வசன இலக்கிய எழுத்தாளர்கள் கவிஞர் கள் அல்லர்; அவர்கள் எழுதியது காவியமும் அன்று. காவியம் என்று அவர்கள் என்றும் சொல்லிக் கொண் டதும் இல்லை. அவர்கள் பெரிதும் கற்றறிந்த பேரறிஞர்களும் அல்லர்; அவர்கள் வசனங்களை விரும்பிக் கேட்டவர்கள் பாமர மக்களே. அந்த வசன இலக்கிய எழுத்தாளர்கள், சமயம், நீதி மட்டும் பொருளாகக் கொள்ளாமல் சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களையும் தம் வசன இலக்கியப் பொரு ளாகக் கொண்டனர்.

கன்னடத்தில் பேடா நரசிம்மய்ய என்பவர் முதன் முதல் வசன இலக்கியம் எழுதியவர். தெலுங்கில் கிருஷ்ணமாசார்யர் வசன இலக்கியத்தை உருவாக்கி யவர்களுள் முதல் இடத்தைப் பெறுகிறார். அவரை அடுத்துத் தெலுங்கில் வசனம் எழுதிய பெருமை இந்த நூலாசிரியராகிய பெத்த திருமலாசார்யா அவர்களையே சாரும்.

பெரிய திருமலாசார்யா வசனங்கள் யாப்பு வரை யறை இல்லாதது; அடி எல்லை அற்றது; ஏதேனும் குறித்ததோர் முடிப்பினை எல்லா வசனங்களின் இறுதியிலும் கொண்டு முடிவது. ஒன்றுக்கு ஒன்று தொடர்பு இன்றி ஒவ்வொன்றும் தனித்து நின்று முடிவது. கவிஞரின் பற்பல மனநிலைகளுக்கு ஏற்ப பற்பல வடிவத்தில் அமைவது; பக்தியைச் சிறப் பாகக் கொண்டது;

பொருள் அடிப்படையில் இவர் வசனங்களை ஐந்து வகையாகப் பிரிக்கிறார்கள். 1. வைணவ சமயம் விளக்கம் பற்றியன 2. புராணத் தொடர் பாயின, 3. விசிட்டாத்துவத வேதாந்தம் பற்றியன 4. நீதி போதனை சார்ந்தன 5. தன் வரலாற்றுக் குறிப்பு உடையன.

வைணவச் சமயம் பற்றியன :

தாள்ளப்பாக்க அன்னமய்ய குடும்பத்தில் வைணவ சமயக் கோட்பாட்டை முதல் முதல் மேற் கொண்டவர் அன்னமய்யாவே. அதற்கு முன் அவர் கள் அத்வைதிகள் ஆவர். வைணவ சமய விசிட் டாத்துவத நெறியைப் பின்பற்றிய அன்னமய்யா வின் மகனார் பெரிய திருமலாசாரியார் தான் வைணவன் என்று இந்த வசனங்களில் குறித்துள்ள தோடு வைணவ பரிபாஷையையும் ஆங்காங்குக் குறிப்பிட்டுச் சொல்கிறார்.

'தவங்கள் வைணவ நெறியில் வாய்த்தது
(வசனம் 5)

'ஆசாரியர்கள் வசனங்களே பிறவிதோறும் தமக்கு வாய்த்த பெருஞ்செல்வம் என்று உன்னை வழிபடுபவர்களே வைணவர்கள்
(வசனம் 31)

'தம்மை நாடிவந்த ஸ்ரீவைணவர்களை இன்முகத்தோடு வரவேற்று இனியன கூறுவது காயத்ரி மந்திரத்தோடு ஈடாகும் (வசனம் 37)

'உன் திவ்விய திருமேனியை வணங்கி வழிபட்டு, தொல்வினையால் வந்த அறியாமையை விட்டு

விலகி ஐயம் அகற்றி நீயே என் தலைவன் எனத் தெளிந்து நான் உன் அடிமை எனத் தேறி ஸ்ரீ வைணவன் ஆனேன். (வசனம் 41)

(வைணவ ஞானம் என்னும் மைபோட்டுப் பார்த்து நீயே என்னும் செல்வத்தைக் காண வல்லேன் ஆனேன் (வசனம் 58)

'ஸ்ரீ வைணவன் ஆகி நின் அடியாரின் பின் நின்றேன். (வசனம் 49)

பல்வேறு திவ்விய தேசங்களில் வாழும் ஸ்ரீவைணவர்கள் என்னும் அன்பினைக் கால் வாயில்கொணர்ந்து வாழ்வெனும் வேளாண்மை செய்து உய்ந்தேன். (வசனம் 66)

'ஒரு பரம்பரையில் ஒருவன் ஸ்ரீவைணவன் ஆனால் அவனைத் தொடர்ந்து அவன் வழியில் தோன்றும் கோடானு கோடி பரம்பரையினர் திருமால் அருளுக்கு உரியவர் ஆவர் என்று புராணங்கள் கூறுகின்றன' (வசனம் 97)

'உன் அடியவர்களான வைணவர்களுக்கு பரம பதம்உறுதி' (வசனம் 113)

'நீ ஆதி விஷ்ணு. உன்னுள்ளிருந்து தோன்றிய பிரமன் பரம விஷ்ணு. அவனால் படைக்கப் பெற்ற அனைவரும் வைணவர்களே.
(வசனம் 137)

## வைணவத் தமிழ் பரியாயச் சொற்கள் :

வைணவ சமய வளர்ச்சிக்கும் வாழ்க்கை நெறி களுக்கும் தமிழகமே தாயகம் எனலாம். எனவே இந்தியாவிலும், உலகிலும் வைணவராக வாழ்வு

நடத்துபவர் சிந்தையிலும் செயலிலும் இத்தகு தமிழ் வைணவ பரியாயச் சொற்களும், நெறிகளும் நிலவி வருதல் கண்கூடு. மொழி இனம், நாடு கடந்த நிலையிலும் இவை நிகழ்ந்து வருதலைக் காணலாம் பெரிய திருமலாசாரியர் வசனங்களிலும் இத்தகு வைணவத் தமிழ்ப் பரியாயச் சொற்கள் பயின்று வருதலைக் காணலாம்.

அ ுகிற்காக நெற்றியில் திருமண் இட்டேன் (வசனம் 6)

எத்தனையோ ஒலிகள் உலகில் உள. அவை எல்லாம் உன் திருமந்திரம் போல் பயன் தருவ தில்லை (வசனம் 17)

மென்மையான உன் திருமேனியை என் கொடிய கண்களால் நான் பார்க்கிறேன் (வசனம் 92)

உனக்குத் திருவாராதனை செய்ய அழைப்பு வந்து தொடங்கும்போது எது சுவையாய் இருக்குமோ எந்த வேளை எப்படி இருக்குமோ என்று நடுங்குகின்றேன். (வசனம் 95)

ஆச்சாரிய தளிகைப் பிரசாதம் (வசனம் 149)

## புராணத் தொடர்பு:

வைணவர்கள் பாரத இராமாயண இதிகாசங் களையும் விஷ்ணு புராணங்களையும், அவதாரக் கதைகளையும் பாகவதத்தையும், ஈடுபாட்டோடு கற்று வருவதை இன்னும் காணலாம். இத்தகு புரா ணங்களில் விஷ்ணு பற்றி வரும் செய்திகள் பல பெரிய திருமலாசாரியர் வசனங்களில் இடம் பெற்றி ருக்கின்றன.

எடுத்துக் காட்டாக இவர் வசனத்தில் மிக நீண்டமைந்துள்ள 166-இல் மகாவிஷ்ணு வைகுண்டத்தில் பள்ளி கொண்டதிலிருந்து அவன் எடுத்த அவதாரங்கள் அனைத்தையும் எடுத்துக் காட்டுவதை உரைக்கலாம். 151-ஆம் வசனத்தில் 'தசரத ராஜதனயா கௌசல்ய கர்ப்ப ரத்னாகர சுதாகரா! பரதூர் ரஜா! இப்படி இராமாவதாரத்தின் நிகழ்ச்சிகளை எல்லாம் விளித்தல் முறையில் எடுத்துக் காட்டுகிறார்.

பர, வியூகம் முதலிய இறைவனின் ஐவகை நிலை, பஞ்சாயுதங்கள், நவவித பக்தி, ஆசாரிய ஸ்தானம் முதலியன இவர் வசனங்களில் ஆங்காங்கே குறிக்கப் பெற்றுள்ளன.

'என்னை மன்னித்தருள நீயாக எப்பொழுது வருவாயோ! என்று உன் திருவடித் தாமரை ஓசையை உன்னிப்பாகக் கேட்கக் காத்துக் கொண்டிருக்கிறேன். (வசனம்—54)

'நான் உனக்குக் குறி. உன் திருவடி எனக்குக் குறி (வசனம்—91)

'பிரபத்தி செய்தவர்களுக்கு நின் திருவடி தீர்த்தம் தங்கள் தலைமேல் இட்டுக்கொள்வதே எல்லாப் புண்ணிய நதிகளிலும் நீராடுதலுக்கு ஈடு ஆகும். (வசனம்—37)

'சங்கேந்திய கையனே! உன் படைகளுக்கு வெற்றி கூறி வாழ்த்துவேன். (வசனம்—2)

'சங்கு சக்கர, கதை, வாள், வில் ஆகிய படைகளை ஏந்தியவனே! உனக்கு எல்லை இல்லா வணக்கம் செய்கிறேன். (வசனம்—20)

'முக்காலமும் ஆசாரியனுக்கு அடிபணியின் சந்தியா வந்தனம் செய்த புண்ணியபேறு கிட்டும். (வசனம்—37)

'உன் அடியவர் நட்பினால் யோகம் கைகூடும். (வசனம்—13)

'முற்பிறவியில் நீ என்பால் காட்டியருளிய கடைக்கண் பார்வையே இப்பிறவியில் உன் அடியான் ஆகும் பேறு எனக்குக் கிட்டியது. (வசனம்—18)

'உன் அடியார்களின் காலணிகளை என் முடியில் சூட்டிக் கொள்கிறேன். உன் அடியார்க்கு அடிமை நான். நின் அடியான், அடியாள் அனைவர்க்கும் அனைத்தும் அளிப்பேன். (வசனம்—57)

'உன் அடியார் உன்னிலும் உயர்ந்தோர் என்பர். (வசனம்—60)

'வீட்டுப் பேரின்பத்திற்கு ஈடானது உன் அடியார் சங்கமம். (வசனம்—39)

'நின்னைவிட நின் அடியார் பெருமைகளை உலகிற்குக் காட்டியருளியவன் நீ. (வசனம்—123)

'உன் அடிமை என்னும் வச்சிரக் கவசம் என்பால் உள்ளது. (வசனம்—163)

## புனைந்துரை

தெலுங்கு இலக்கியத்தில் புனைந்துரை இரு வகைப்படும். ஒன்று நிலையழகு பற்றியது, மற்றது

இயங்கழகு பற்றியது. இதனை முறையே 'அசலத் சௌந்தர்ய வருணனை' 'சலத் சௌந்தர்ய வருணனை' என்பர்.

போர் நிகழும் சூழல் ஒன்று ஓரிடத்தில் புனைந்துரைக்கப் பெறுகிறது. பயம் அபயம் என்னும் வீரர் இருவருக்கிடையே நடந்த போரில் காமம், வெகுளி, மயக்கம் முதலிய அறுபகைகள் எனும் விண்மீன் கூட்டங்கள் விழ்ந்தன; மண், பொன், பெண் என்னும் மூவகை (தாபத்ரயம்) என்ற இடிகள் விழுந்து நொறுங்கின. அருளற்ற பூமி நடுங்கிற்று. தீய குணங்கள் என்னும் திசைகள் நிலை தடுமாறின. இப்படியே வேட்டையாடும் போது நிகழும் செயல்களும் உருவங்களாகப் புனையப் பெற்றுள்ளன.

உலக உண்மைகள் சில சிறப்பாக இவர் வசனங்களில் இடம் பெறுவதைக் காணலாம்.

சாவி கையிலிருக்கக் கதவுகளை உடைப்பது ஏன்?
(வசனம்—160)

கல்மேல் பானையை வைத்தால் கல் பிரமனை ஆகுமா? (வசனம்—40)

'அரச இலச்சினைக்குக் கொடுத்த கையூட்டு அரசவைக்குக் கொடுத்தது அல்லவா?
(வசனம்—40)

'பரிசவேதி வீட்டில் இருக்கப் பொன்னுக்கு அலைவது ஏன்? (வசனம்—14)

'பூண்டு போட்டு சமைத்த கறிக்குக் கத்தூரி மணம் வருமா? (வசனம்—105)

'வீரன் பெற்ற வெற்றி அரசனுக்கு அல்லவோ?
(வசனம்—67)

தலைவன் தரும் கௌரவத்தைப் பெறுவதே உண்மையான ஊழியம் ஆகும்; கொசுறு கேட்டுப் பெறுவதல்ல. (வசனம்—177)

இவ்வாறு இவர் வசனங்கள் பல.

தமிழில் இல்லாத இத்தகு வசன இலக்கியம் தமிழுக்கு அறிமுகப்படுத்தும் பாங்கில் இந்தப் பணி மேற்கொள்ளப் பெற்றது. இதற்குத் தோன்றாத் துணையாக ஒவ்வும் வகையெல்லாம் உதவியவர் தெலுங்குப் பேராசிரியர் முனைவர் K. சர்வோத்தம ராவ் அவர்கள். அவர்கள் துணை இன்றேல் இந்தத் தமிழாக்க நூல் இவ்வளவு சரியாக, சிறப்பாக அமைந்திருக்காது. அவருக்கு நான் பெரிதும் கடமைப் பட்டுள்ளேன்.

# ‘பிரேமத்தில் பெண் பேச்சு’

பண்டைத் தமிழ் இலக்கியமாகிய சங்கப் பாடல்களின் அடிக்கருத்து காதல், வீரம் என இருபெரும் பாடுபொருள்களில் அமைந்துள்ளது. அவ்விரண்டிலும் அகமே பெரிதும் சிறப்பாகக் கொள்ளப்பெறும். தலைவன் தலைவியரிடையே எழும் காதல் அன்பினை களவு, கற்பு, பிரிவு, இரங்கல் என்னும் வகைப் பாடுகளுடன் புலவர் பலர் அந்த அன்பு உணர்வைப் பலவாறு புலப்படுத்தி உள்ளனர்.

சங்க இலக்கிய காலத்தை அடுத்து வந்த பக்தி இலக்கியக் காலத்தில் ஆழ்வார்களும் தேவார மூவர்களும் தலைவி தலைவனை நினைத்து ஏங்கும் ஏக்கத்தில், கூடி மகிழ்ந்த ஏற்றத்தில், பிரிந்து வருந்தும் கலக்கத்தில் ‘நாயகி நாயக பாவ’ பக்திப் பாசுரங்கள் பல, பாக்கள் பல பாடினர்.

வைணவ ஆசாரியர்கள் ஆழ்வார்கள் பாடியருளிய தெய்வீகக் காதல் பாசுரங்களைத் தாய்ப் பாசுரம், தோழிப் பாசுரம், மகள் (தலைவி) பாசுரம் என இனங்கண்டு, பகுத்து அழகிய உரை விளக்கம் பல தந்துள்ளன. ‘ஞானத்தில் தன் பேச்சு, பிரேமத்தில் பெண் பேச்சு’’ என்று அதற்கு ஒரு பக்திக் காதல் பாடல் இலக்கிய இலக்கணமும் உருவாக்கித் தந்துள்ளனர்;

அத்தாய்ப் பாசுரங்களில்

ஒருமகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்;
செங்கண் மால்தான் கொண்டு போனான்
பெருமகள் ஆய்க்குடு வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
நுசலைக் கண்டு உகந்து
மணாட்டுப் புறம்செய்யுங் சொல்லோ.''

(பெரியாழ்வார் திருமொழி—300)

ஒப்பற்ற பெண் பிள்ளை ஒருத்தியைப் பெற்றெடுத்தேன். திருமகளைப் போல் உலகெலாம் போற்ற இவளை வளர்த்தேன். செவ்விழி கொண்ட கண்ணழகினால் அந்தத் திருமால் தானே இவளை மயக்கிக் கொண்டு போனான். ஆயர்குடித் தலைவியாக வாழ்ந்து, அரிய பிள்ளை கண்ணனைப் பெற்று வளர்த்த யசோதை தன் மருமகளாய்க் கண்ணன் பின் சென்ற என் மகளை அன்போடு ஏற்பாளோ? மணப் பெண்ணாய்க் கொண்டு சீராட்டிப் பாராட்டு வாளோ? உடன் போக்காய் கூடிவந்தவள் தானே என்று வெறுத்து ஒதுக்குவாளோ'

என்பது பெரியாழ்வார் உளக்கிடக்கை ஆழ்வார் இங்கே தாய்ப்போக்கில் தான் திருமால்பால் கொண்ட காதல் அன்பை, நாயகிகா பக்தி உணர்வைப் புலப்படுத்துகின்றார்.

இப்படியே அப்பர்பெருமான் என அழைக்கப் பெறும் திருநாவுக்கரசர் தோழிப் பாங்கில் தன்னுயிர் தான் அறப்பெற்று, தனது எனும் உணர்வும் அழியப் பெற்றுத் தலைவன் திருவடிகளை அடைந்த தம் உயிர் அனுபவத்தை,

முன்னை அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!

திருநாவுக்கரசர் தேவாரம்:

இவ்வாறு பெரிய திருமலாசாரியார் எல்லாவற்றையும் ஒப்படைத்து 'என்னை உடையானே! புகல் ஒன்று இல்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்'. என்று தம் 99-ஆம் வசனத்தில் உருகுகிறார்.

'சீதா பதியே! என் கவிதைக் கன்னிக்கு நீயே ஏற்ற மணாளன். தெய்வ மானிட கணப் பொருத்தம் நன்கு அமைந்து உள்ளது 'மணமேடை எங்கே?' என்கிறாயா! இதோ! என் நாவே மணமேடை: என் மனந்தான் மணமகனையும் மணமகளையும் சிறிது காலம் மறைத்து வைக்கும் திரையாம். மகிழ்ந்து பொலியும் என் முகந்தான் உன் நெற்றியில் கட்டும் தங்கப் பட்டமாம் என் பக்தியே கங்கணம்; எழுத்துக்களே அட்சதை; யாப்பு ஓசையே கொட்டுமேளம்' ஏற்ற இறக்கங்களோடு இயைந்த ஒலி நயமே நலுங்குப் பாடல்கள்; கண் பார்வையே மங்கள ஆரத்தி என் வாய்ச் சொற்களே மலர் மாலைகள். நான் இசைக்கும் உன் ஆயிரம் திருநாமங்களே திருமணம் காண வந்த உறவுக் கூட்டத்தார்; உன் கல்யாண குணங்களையே இவ்வாறு பாடு பொருளாகக் கொண்ட என் கவிதைக் கன்னியை நீ மணந்து

கொண்டாய். இனி எனக்கு என்ன கவலை. நீ இவ்வாறு என் கவிதைக் கன்னியைக் கைப்பற்றியதால் என் கர்மக் கட்டுக்கள் அறுந்தன. நீயும் நின் தேவ கணங்களும் சிரஞ்சீவிகளாய் வாழ்வீராகுக. என் கவிதைக் கன்னியோடு கூடி இசை, இலக்கிய, அணி முதலிய பிள்ளைகளையும் பெயர்களையும் பெற்று வாழையடி வாழையாய் தொடர்ந்து அடியார்களைக் காத்தருள்வாயாக. திருவேங்கடத்தானே!

# ‘வழுவிலா அடிமை செய்யவேண்டும்’

‘ஆரா இயற்கை அவா.’ உயிர் எடுத்த உடல் செய்யும் ஒவ்வொரு வினைக்கும் அந்த அவாவே, ஆசாபாசங்களே காரணமாக அமைகின்றன. ஆசாபாசங்களால், அழுக்காறு, வெகுளி உள்ளத்திலும் இன்னாச்சொல் நாவிலும், ஈயாது பிறர் பொருட்டு ஆசைப்படும் தீயநெறி செயலிலும் ஏற்படுகிறது. இதன் விளைவாக பாவ புண்ணியங்கள் அமைகின்றன. அதற்கேற்ப பிறப்பு இறப்பு மாறி மாறி வருகின்றன. இந்த மாயைச் சுழற்சி உயிர் இறைவனை அடையத் தடையாக உள்ளது. அந்தத் தடையிலிருந்து விடுபட்டு அவன் அருளாலே அவன்தாள் வணங்கும்’ நன்னெறி வாய்க்கிறது அப்போது

*‘ஒழுவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி*
*வழுவிலா அடிமை செய்ய வேண்டும்...’*

என உயிர் இறைவனைத் தொழுகிறது. இந்த நிலை சிறந்த முற்றுருவகமாக 111-வது வசனத்தில் பின் வருமாறு பெரிய திருமலாச்சாரியார் உரைக்கிறார்.

‘‘பரமேசுவரா! என் உடல் தேர். என் புண்ணிய பாவங்கள் இரண்டும் அதனை இழுத்துச் செல்லும் குதிரைகள். என் ஆசைகளே லகான். என் காம குரோதங்கள் ஆயுதங்கள் எனக் கொண்டு பிறவி தொறும் பிறவிதொறும் இம்மை மறுமை உலகங்

களில் திரிந்த வெற்றித் தலைவன் நான்— (என்று இந்நாள்வரை இறுமாந்திருந்தேன்.) பிரபஞ்சத் தலைவன் நீயே என்று ஆசாரியன் அருளால் இப் பொழுது உன்னைத் தொழுதேன். உனக்குக் கைங் கர்யம் செய்யத் தொடங்கினேன். மெய்யறிவு என்னும் கூலி என் கைங்கர்யத்துக்குக் கொடுத்தால் போதும். இந்நாள் வரை உன் உலக மாயையில் உழன்ற நான் உனக்குத் தொண்டனாக ஆனது உன் விருப்பம் தானே! திருவேங்கடவா!

# பூசைகொள்ள வாராய் பராபரமே!

'உடல் மிசை உயிர் எனக் கரந்து எங்கும்' இறைவன் பரந்துளன்'— இதனை உணர்ந்த ஞானிகள்

> ''நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே
> மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய்''

என இறைவனை அழைத்து மானச வழிபடுவர்.

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது. இந்த மானுடப் பிறவியில்தான் உயிர் தன் தலைவன் இறைவன் என அறியும் வாய்ப்பு உள்ளது. எனவே இந்த மானிட உடல், இறையை உணர்ந்து அவனை வழிபட்டு உய்வதற்கான ஒரே கருவி.

அதனால்தான் திருமூலரும்—

> உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
> உடம்பி னுள்ளே உறுபொருள் கண்டேன்
> உடம்பினுள் உத்தமன் உறைகின்றான்— என்று
> உடம்பினை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே!

என்று உறைபொருளாகிய இறைவன் உறையும் கோயில் இந்த உடம்பு என்று உரைக்கின்றார்.

பெரிய திருமலாசாரியாரும் 7-வது வசனத்தில் இந்த உண்மையைப் பின்வருமாறு உருவகித்து அழகாகப் பாடுகிறார்.

'ஓ! திருவேங்கடமுடையானே! என் உடல் நீ எப்போதும் பிரியாது வாழும் இல்லம். என் அறிவும் மெய்யறிவும் (நின் சந்நிதியான இருபுறமும் உள்ள) சுடர்விடும் விளக்குகள். என் நாசித் துவாரங்கள் இரண்டின் வழியே வந்து போகும் மூச்சுக் காற்றுக் கள் உனக்கு இருபுறமும் வீசப்பெறும் வெண் சாமரைகள். என் நெஞ்சில் உன் நினைவில் எழு கின்ற ஆர்வம் நீ அணியும் வெளிர் செவ்வாடை. என் பக்தி நீ வீற்றிருக்கும் சிம்மாசனம். (உன் காட்சியில் புளகாங்கிதம் அடைந்து) நான் மயிர்க் கூச்செறிந்தபோது என் உடலில் நின்ற மயிர்க்கால் கள் மலர் கோத்து காணிக்கையாக உன் முன் வைத்த பூமாலைகள். உன்னைத் துதிக்க என் நா எழுப்பிய எழுத்தொலிகள் உனக்கு ஊதும் கொம்பு, உன் எழுச்சியை அறிவிக்கும் பேரிகை, உன் வழி பாட்டின்போது எழும் மணிஓசைகளாகும். நித்திய கைங்கர்யத்தின்போது ஆர்வத்தோடு உன் அழகு மேனியைப் பார்க்கும் என் அன்புப் பார்வை உன் மேனிக்குப் புனுகு பூசுவது ஆகும். என் இதயத்தில் கமழும் சாத்துவிக குணம் உனக்கு நான் இடும் நறும்புகை. நீ தெய்வம்; நான் பூசை செய்பவன். இவ்வாறு நாள்தோறும் விழாவுக்கு எழுந்தருள் வாயாக திருவேங்கடம் உடையானே!

# உனக்கே உரியது உயிர்

திருமாலே உபாயம், 'களைகள் மற்று இல்லேன்' என்று இருக்கையே அது. உயிரின் சொரூப விரோதியாகிய யான், எனது என்னும் செருக்கு அற அவன் திருவடிகளே துணை. அவன் ஆணைவழி நிற்றலே நெறி'— என்னும் அர்த்தப் பஞ்சகத்தில் ஒன்றான நெறியைப் புலப்படுத்தும் வசனம் பின் வருவது. இது 48-வது வசனமாக அமைந்துள்ளது.

"உந்திக் கமலத்தோனே! அரசனை அந்தரங்கத்தில் சந்தித்து விரோதியின் நிலையை உரைத்து அரசனுக்கு உரிய கோட்டையைக் கைப்பற்ற வழி கூறும் ஒற்றனைப் போல் இந்த ஆன்மா அந்தரங்கத்தில் உன்னிடம் விண்ணப்பிக்க வந்துள்ளது. செவிமடுத்தருள்க!

'திருவேங்கடத்தானே! மண்ணுலகத்தில் உடல் என்னும் மாயா பட்டணம் ஒன்று உள்ளது. அதற்கு அகங்காரம் என்பவனே அரசன்; பிடிவாதம் முதல் அமைச்சன். காமம், வெகுளி, மயக்கம் என்னும் தீய குணங்கள் மூன்றையும் யானை, குதிரை, தேர்ப் படைகளாகக் கொண்டுள்ளது அது. பாபச் செயல்களே அதன் காலாட்படை. வேட்கைகளே அந்தப் பட்டணத்தின் காவலர்கள். தனம், தான்யம் நிறைந்த கிடங்குகளே சிற்றின்பச் செய்கைகள். இந்தக் கோட்டை வாசிகள் ஆசை என்னும் இருளில் தான் யார் தன் தலைவன் யார் எனும் தம்மைப்

பற்றிய உண்மையை மறந்து ஏமாந்து உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். இறைவா! ஞானம் என்னும் உன் தளபதியுடன் அறிவு, உறுதி, அறம், அடக்கம் என்னும் நாற்படையையும் அனுப்பி அருள்க. உனக்கே உரிய அந்தக் கோட்டையைக் கைப்பற்றி அங்கு உன் புகழை நிறுவி அகங்கார அரசனையும் காமம், வெகுளி, மயக்கம், பாபம் என்னும் அவன் நாற்படைகளையும் வென்று உன் புகழை அங்கு நிறுவி உனக்கே உரிய உயிரைப் பக்திக் கயிற்றில் கட்டி இழுத்துக்கொண்டு வந்து இங்கு உன் முன் நிறுத்துகிறேன். ஆணையிட்டு அருள்வாயாக! திருவேங்கடத் தானே!

# தீயினில் தூசாகும்

உயிர்கள் கர்மவினைக் கட்டுள் அகப்பட்டு உள்ளன. போய வினைகள் வழி நிகழ்வினை, அதன்வழி இனிப் புகும் வினை என உயிர்கள் இந்த வினைச் சுழற்சிக்குள் அகப்பட்டுக் கொண்டு பிறப்பு இறப்பு, இறப்பு பிறப்பு என எல்லையில் காலம் சுழல்கின்றன. இந்த வினைக்கட்டை உணர்ந்தவர்கள் அதிலிருந்து விடுபட இறைவனைத் தஞ்சமென அவன் அடிக்கீழ் அமர்ந்து புகுகின்றனர்.

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தில் தோன்றும் அணிவிளக்கை
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும்

என்று உயிர்க்கு உணர்த்திய ஆண்டாள் நாச்சியாரின் உள்ளக்கிடக்கையைச் சற்று முற்றுருவகக் கற்பனையில் காட்டுவது வசனம் 47 :

'மச்சாவதாரனே! கேளாய்!! என்னுள்ளே பாபம் என்பவன் பேருருக்கொண்டு வீறிட்டெழுந்து வரவே அஞ்சி உன் திருவடி நீழலே கதி என்று அங்கு ஒதுங்கிப் பதுங்கிக் கொண்டேன். நீயோ அருளாளன். அபயதான புருடன். உன் அருள்

அவனோடு போர் செய்யத் தொடங்கியது. போரோ கொடும்போர். அந்தப் போர் மண் தொட்டு விண் வரை பரந்த பெரிய போர். முதலில் காம, குரோத, மத மாச்சர்யம் என்னும் உயிரின் பகைகளாகிய ஆறு விண்மீன்கள் நிலைகொள்ள இயலாமல் அற்றற்று விழுந்து ஒழிந்தன. மண், பொன், பெண் என்னும் மூன்று ஆசைகளாகிய கோடை இடிகள் விழுந்து நொறுங்கிப் போயின. சிந்தைக் கடலோ கொந்தளித்துக் குமுறியது. இரக்கம் இன்மை என்னும் பூமி நடு நடுங்கத் துவங்கியது. கொடுங்குணங்கள் என்னும் திசைகள் சிதறின. தீய ஆசையாம் குன்றுகள் அமிழ்ந்து மறைந்தன. இந்த அஞ்சத்தக்க அரும்போரில் பாபம் என்பவன் தோற்றோடிப் போனான். உன் அருளே வென்றது. இந்த நற்செய்தியைத் தங்கட்கு விண்ணப்பிக்கின்றேன். கேட்டருள்க! திருவேங்கடமுடையானே!!

# தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே

*பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்!*
*பெரிது பெரிது புவனம் பெரிது*
*புவனமோ நான்முகன் படைப்பு:*
*நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன்*
*கரிய மாலோ அலைகடல் துயின்றோன்*
*அலைகடல் குறுமுனி அங்கையில் அடக்கம்*
*குறுமுனி யோக கலசத்தில் பிறந்தோன்*
*கலசமோ புவியிற் சிறுமண்;*
*புவியோ அரவினுக்கு ஒருதலை பாரம்;*
*அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்*
*உமையோ இறையவர் பாகத்து ஒடுக்கம்*
*இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம்*
*தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே!*

**என்று அடியார் பெருமையை ஔவையார் எடுத்துரைத்தார்.**

*"தில்லைவாழ் அந்தணர்கள் அடியார்க்கும் அடியேன்..."*

**என்றார் தேவார மூவருள் ஒருவரான தம்பிரான் தோழர் சுந்தரமூர்த்தி நாயனார்.**

**ஆழ்வார்களுள் ஒருவர் தன்னைத் 'தொண்டர் அடிப்பொடி' என்று அழைப்பதில் பெருமை கண்டார்.**

*"ஆடிப்பாடி அரங்க! ஓ என்று*
*அழைக்கும் தொண்டர் அடிப்பொடி*

என்று அடியார் பெருமையைக் குலசேகர ஆழ்வாரும் எடுத்துரைத்தார்.

'திருமால் தனக்குத் தீங்கிழைப்பாரைப் பொறுப்பினும் பொறுப்பான்; ஆனால் தன் அடியார்க்குத் தீங்கிழைப்பவரைப் பொறான்'' என்பது வைணவ உண்மை.

இத்தகு திருமால் அடியவர் பெற்ற பேற்றினை, உற்ற ஏற்றத்தை வசனம் 60-இல் பின்வருமாறு திருமலாசாரியார் பாடுகிறார்.

'இரணியகர்ப! உன் படுக்கையாக அமைந்த அடியான் ஆதி சேடன் உலகைத் தாங்கும் பேறு பெற்றான். உன் வாகனமாகிய கருடாழ்வான் அமிருதத்தைத் தூக்கிக் கொண்டு போகும் திறன் உற்றான். உன் மகளாகிய கங்கை அந்தணர்தம் சிந்தையனாகிய சிவபெருமான் தலையில் ஏறி அமர்ந்துள்ளாள். உன் அடியான் துருவன் பிரம்ம லோகத்தையும் கடந்து சென்று உயர்ந்து விளங்குகிறான். உன் பக்தனாகிய நாரதனோ தேவாதி தேவர்களுக்கு இடையேயும் கலகத்தை உண்டு பண்ணிக்களிக்கின்ற சிறப்புப் பெற்றுள்ளான். உன் அடியார் பெருமையே பெருமை.

# நாராயணா என்னும் நாமம்

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!

என்று நாராயண நாமத்தின் நலன்களை எல்லாம் திருமங்கை ஆழ்வார் தம் பெரிய திருமொழியில் பாடிப் பரவுகிறார்.

திருமாலாகிய பெருங்கடலில் அலைகள் உண்டு; அச்சம் தரும் மீன் இனங்கள் உண்டு, என்றாலும் பக்தியெனும் மத்தால் கடைந்த அடியவர்க்கு அவன் அமிர்தமாகிய 'ஓம் நாமோ நாராயணாய' என்னும் எட்டெழுத்து மந்திரத்தை அளிக்கிறான். அந்த மந்திரப்பொருளில் தோய்ந்து அடியார் யான் எனது என்னும் பற்றற்று அவன் திருவடியே பேறு அதற்கு உபாயமும் அவனே எனத் தெளிந்து அவன் அடிக் கீழ் அமர்ந்து புகுந்து பேரின்பப் பேற்றில் கைங் கர்ய இன்பத்தில் திளைக்கின்றனர். வசனம் 55

வைகுண்டாதிபதியே! உன் புகழ்ப் பெருங் கடலுக்கு அருளே நீர். சௌசீல்யம், சௌலப்பியம் முதலிய உன் கல்யாண குணங்களே அலைகள்; உலகை உண்டு உமிழும், அழித்து அளிக்கும் உன்

செயல்கள்தாம் கடலில் திரியும் திமிங்கலம் நீரை உண்டு உமிழும் செயல்கள்: உன்னைப் போற்றி ஒலிக்கும் வேத ஒலிகளே அந்த அலையின் ஓசை; உன் கபட நாடகச் செயல்கள் நீருள் மூழ்கி மறைந்து கண்ணுக்குத் தெரியாமலும் சிற்சில போது வெளிப்பட்டும் வாழும் முதலை, ஆமை முதலிய நீர்வாழ் உயிரின் வாழ்க்கை நிலைகள்.

இப்படிப்பட்ட உன் புகழ்ப் பெருங்கடலை உன் அடியவர்கள் உன் துணையால் கடைய பக்தி என்னும் காமதேனு பிறந்தது; ஞானம் என்னும் சந்திரோதயம் தோன்றிற்று. இன்னும் பேரின்பம் ஐராவதம், சாத்துவிக குணம் என்னும் கற்பக மரம், அனந்த நாமம் ஆகிய நீரர மகளிர், திருமந்திரம் என்னும் அமிர்தம் பிறந்தன. 'ஓம் நமோ நாராயணாயா' என்னும் அந்த எட்டெழுத்து மந்திரத்தைத் துய்த்துக் கொண்டே இருக்கிறோம். திருவேங்கடவா!

# உற்றோமே ஆவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்!

உலக சமய தத்துவங்கள் எல்லாம் உலகு, உயிர் இறை இவை பற்றிய உண்மையை, இன்மையை, இவற்றுக்கு இடையே உள்ள தொடர்பைப் பற்றி அமைந்தனவே ஆகும். இவற்றுள் வைணவ, சைவ சமய தத்துவங்கள் இரண்டும் உலகு, உயிர், இறை மூன்றும் உள் பொருள்களே— உள்ளவையே- உண் மையே; மாயை அல்ல. இல்பொருள் அல்ல என்று ஏற்று உரைப்பன: இவை இரண்டிலும் வைணவ தத்துவமாகிய விசிட்டாத்துவிதம் விசேஷமான அத்வைதம் என்று விளக்கப் பெற்று ஒரு பொருளே அதற்கு உடலாக பிரபஞ்சமும் பிரபஞ்சத்தில் வாழும் மனிதன் முதலான உயிர்களும் உள்ளன என்பர். இந்த உண்மையை,

''திடவிசும் பெரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுதுமாய் அவையவை தொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே''

என்னும் நம்மாழ்வார் திருவாய்மொழிப் பாசுரம் தத்துவம் செய்யும், 'உடல்மிசை—உயிர் என' எனும் ஆழ்வார் தொடருக்கு எம்பெருமானார் இயற்றிய தரிசனமே எம்பெருமானார் தரிசனம் எனப் போற்றப் பெறும் விசிட்டாத்துவித தத்துவம் ஆகும்.

வசனம் 19-இல் பெரிய திருமலாசாரியார் மேற் கண்ட கருத்தின் வழி பாடுகிறார். 'உண்ணும் சோறு பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்! என்னும் நம்மாழ்வார் பாசுரம் இந்த வசனத்தில் நிழலாடுவதைக் காணலாம்.

'வையம் எல்லாம் வணங்குவதற்கு உரியோனே எங்கும் நீ நிறைந்திருக்கிறாய்! எனவே நாங்கள் எங்குத் திரிந்து வந்தாலும் உன்னிடமிருந்து வருப வரே ஆவோம். நீ அனைத்து உலகத் தலைவன். ஆகவே உன்னை நாங்கள் அடி பணிந்தவர் ஆவோம். காணும் காட்சி எல்லாம் உன் வடிவே.* எனவே எப்போதும் உன்னை வணங்கியவரே ஆவோம். எப்பொழுதும் எங்களை விட்டு விலகா தவன் நீ. ஆகவே எங்கும் எப்போதும் எம் எண்ணம் எல்லாம் உன்னைப் பற்றிய சிந்தனையே ஆகும். நான் உண்ணும் இந்த பிரசாதம். நான் செய்கின்ற வேளாண்மை, வாணிகம் முதலிய தொழில்கள் எல்லாம் உன் நினைவோடேயே நிகழ்வதால் உன் திருவிளையாடலுக்கு உகந்த பூசனைகளே.* என்னை நீ பிறப்பித்தாய். எனவே இந்தப் பிறப்பு உன்னா லேயே ஈடேற வேண்டும். இதனை மறவாமல் என்னை நீ காப்பாற்றி ஆள்வாயாக. நான் எப் பொழுதும் நீ ஆட்டும் கயிற்றில் சுழலும் பம்பரம். நான் இன்று இப்போது செய்யும் இந்த விண்ணப் பத்தைப் பத்தாயிரம் விண்ணப்பமாகக் கேட்டு அருள் புரிவாயாக! திருவேங்கடவனே!

இந்த வசனம்

* *கண்ணில் காண்பது உன்காட்சி கையால் தொழில்*
*பண்ணல் பூசை! பகர்வது மந்திரம்;*
*மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவுமே*
*அண்ண லே! நின் அருள்வடி வாகுமே—*

* *நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே*
*மஞ்சன நீர் பூசைகொள்ள வாராய் பராபரமே''*

என்னும் தாயுமானவர் பாடல்களோடு ஒப்பிட்டு உணர்ந்து துய்க்கற்பாலன.

# கை விட்டு விடாது காத்தருள்க!

‘ஓம் நமோ நாராயணாய’ என்னும் திருமந்திரத்தின் ‘நம’ பதம் நான் எனக்கு உரியவன் அல்லேன்; உனக்கு உரியன்; உனக்கே உரியவன்; உன் உடைமை— உன் எடுப்பார் கைப்பிள்ளை நான்— என்ற உண்மையை வசனம் 23 விளக்குகின்றது. மேலும் பூவோடு சேர்ந்த நாரினைப் போல இறைவன் தன்னோடு தன்னுள் உறைவதால்தான் தனக்கு இந்தப் பேரும் புகழும் ‘என்னைக் கை விட்டு விடாதே’ என்று பிரபத்தி செய்கிறார் பெரிய திருமலாசாரியார் இந்த 23ஆம் வசனத்தில்.

‘கஜேந்திர வரதா! நீ எங்களோடு உள்ளாய். என்று பிறரை ஆசீர்வதிக்கிறோம். ஆனால் அதன் பயனை வழங்கும் திறன் எங்களுக்கு இல்லை. எங்களோடு இருக்கும் நீதான் அதனை வழங்குகிறாய். நீ என்னுள் வந்து உறைந்துள்ளாய் என்று பிறரால் வணங்கப் பெறுகிறேன். ஆனால் செருக்கினால் அப்படி வணங்கப்பட்டவன் அல்லன். உன் அடியான் என்பதால்தான் பெரியவர்களிடம் கலந்துறைகிறேன். அதுவே அன்றி என் தவப் பெரும் பேற்றால் பெரியவன் என்று அகங்காரம் கொண்டவன் அல்லன். நீ மனிதனாக என்னைப் பிறப்பித்தாயே அன்றி என் சுதந்திரத்தால் பிறந்தவன் அல்லன் நான். நான் எவ்வளவு மக்கு என்று நீ அறிவாய். ஆனாலும் என்னை நீ கைவிடலாமா? திருவேங்கடவா!!

# அங்கதப் பேச்சும் அருள் வேட்கையும்

இலக்குவன் இராமனிடம் அன்புடையவன் பேரன்பு கொண்டவன்தான். ஆனால் தான் ராமனின் தம்பி என்ற முனைப்பு, செருக்கு அவன்பால் உண்டு. இதனை அவன் தாய் சுமித்திரை நன்கு அறிவாள்,

கைகேயி கட்டளையை ஏற்று இராமன் அரண்மனையை விட்டுக் காடேகப் புறப்படும்போது இராமனுக்கு முன்பு இலக்குவன் செல்கிறான்; அப்போது சுமித்திரை 'இலக்குவனா! நில் இராமனுக்குப் பின்னே செல். தம்பி என்னும் செருக்கை மறந்து அடியவன் போலச் சேவகம் செய்பவனாகப் பின்னே செல்!' என்று நெறிப்படுத்துகிறாள். இதனைக் கம்ப நாட்டாழ்வார்.

*பின்னும் பகர்வாள் மகனே! இவன் பின்செல் தம்பி*
*என்னும் படியன்று அடியாரின் ஏவல் செய்தி—!*

என்று பாடி உணர்த்துவார்.

இப்படிப் பக்தி செய்வதில் கூட அகங்காரம் வந்துவிடுமோ என்று அடியவர் பயப்படுவர். அப்பர் சுவாமிகளும் 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்று— வழிபாட்டிலும் செருக்கின்மை இல்லை என்பதை உணர்த்துவார்.

திருவேங்கடவனிடம் பெரும் பக்தி பூண்ட திருமலாசாரியாரும் அப்படி ஒரு ஆணவம் தனக்கு வந்துவிடக் கூடாது என்று அஞ்சுவதை வசனம் 35 உணர்த்துகிறது.

இதன் அமைப்பு அடியாரின் அன்புக் குறையை அறிவான விளக்கத்தால் சரிசெய்யும் ஒரு புத்திசாலி

பக்தன் பேச்சு போலவும் அமைந்திருப்பதைக் காணலாம்.

'தேவ தேவா! உன்னை நான் பலமுறை சிந்திப்பின் இவன் எதனை விரும்புகிறானோ என்று நீ நினைத்துக் கொள்வாய் என ஒரே ஒரு முறை மட்டுமே உன்னை நினைப்பேன். மீண்டும் உடலை வருத்தித் தவம் செய்தால் உள்ளுயிராகிய உனக்கு வருத்தம் வரும் என்று அப்படித் தவம் ஒன்றும் செய்யாமல் சும்மா இருப்பேன். பெயரிட்டு உன்னைக் கூவி அழைத்தால் உன் செயல் அனைத்தையும் விட்டுவிட்டு கஜேந்திரன் அழைத்தபோது ஓடி வ்ந்ததுபோல்)வந்துவிடுவாய் என்று உன் நாமத்தை உச்சரிக்காமல் மௌனமாய் இருந்து விடுவேன். உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துள்ள உன்னை உலகத்தில் நீ இருக்கிறாய் என எண்ணிப் பார்ப்பேனானால் உன்னைப் பரிசோதிப்பதாக ஆகி விடும் என்று அப்படி எண்ணிப் பார்ப்பதற்குத் தயங்குகிறேன். உன் வரலாற்றை ஒன்று விடாமல் கேட்டால் உன் அவதார இரகசியம் வெளிப்பட்டு விடுமோ என்ற அச்சத்தால் கேட்பதே இல்லை. உன் அருகிலிருந்து பணி செய்து உன் திருவடியை அணுகி வணங்கினால் வெளிப்பகட்டாகிவிடுமோ என்று சேய்மையிலிருந்தே சேவிக்கிறேன். இதை அறிந்துகொண்டு நீயே அருள் புரிதல் வேண்டும். திருவேங்கடவா!

அடியவர் குறைகளை எல்லாம் தன்மேல் ஏற்றிக் கொண்டு அதற்குத் தக்க காரணங்களைத் திருவேங்கடவனிடம் எடுத்துரைத்து அக்குறைகளை எல்லாம் நிறைவாக்கி அவன் அருளுக்கு அத்தகு அடியானும் உகந்தவனே என்று பரிந்துரை செய்ததாகவும் இதனைக் கொள்ளலாம்.

# நின் திருவுள்ளம் எப்படியோ! அப்படியே அருள்க!

பக்குவப்பட்டுள்ள தாமரைமுகை கதிரவன் ஒளி கண்டதும் மலர்கிறது அந்த ஒளி தாமரை முகையை இதழ் இதழாக நெகிழ்வித்து மலர்வித்து அதனுள் ஊடுருவிச் செல்கிறது. அப்படியே பக்குவமான ஆன்மாக்களை இறைவன் அருள் அவனுக்கு உரியவனாக அந்த ஆன்மாவை மலர்வித்து உள் உறைந்து மகிழ்விக்கிறது. இந்த அருட்பேற்றிற்காக ஒவ்வொரு உயிரும் பக்தி செய்து காத்துக் கிடக்கிறது. "நெறியறியேன் நின்னையே அறியேன், நின்னையே அறியும் அறிவறியேன், உடையாய் அடியேன் உன் அடைக்கலமே!" என மணிவாசகப் பெருமான் வேண்டியது போல பெரிய திருமலாசாரியார் திருவேங்கடவனை வேண்டுகிறார்.

'என்னை முற்றும் உயிருண்டு
என் மாயஆக்கை யினுள்புக்கு
என்னை முற்றும் தானேயாய்
நின்ற மாய அம்மான்'

என்று நம்மாழ்வார் உற்ற இறை அனுபவத்தைத் தானும் பெற பெரிய திருமலாசாரியர் கொண்ட வேட்கை இந்த வசனத்தில் (75) தெளிவாகிறது.

'அயோத்தி நகர் அதிபதியே! எந்த நெறியை மனம் ஏற்கிறதோ? எந்த வழியில் உன்னை மகிழ்விப்

பேனோ! எந்த வடிவில் உன் கருணை எனக்கு வாய்க்குமோ! எந்த வகையில் உன் தரிசனம் எனக்குக் கிட்டுமோ! எந்த முறையில் உன் சலுகை பெற்று நான் உய்வேனோ! மனதில் வேண்டிக் கொள்கிறேன். நீ என் உள்ளத்தில் மிக நெருங்கி அண்மையில் உள்ளாய். பிரமன் முதலான தேவர்களுக்கு அரியனாகிய நீ எனக்கு எப்படி எளியன் ஆனாய்? என்று சாதகப் பறவை வான் மழையை எதிர்பார்த்துக் காத்திருப்பது போல, விண்ணில் திகழும் கதிரவனோடு மண்ணில் மலரும் தாமரை தன் உறவை வளர்த்துக்கொள்வது போல, நிலவின் தோற்றத்திற்கு நீள்கடல் மகிழ்ந்து பொங்குவது போல, வெண்ணிலா ஒளிக்கு சந்திர காந்தக்கல் நெகிழ்ந்து உருகுவது போல உன் காட்சியை எதிர் நோக்கி நான் காத்திருக்கிறேன். என்பால் என்ன குறை உள்ளது? தன்னிச்சையின்றிக் கிடக்கின்ற புழுவைத் தூக்கிக் கொண்டுவந்து தன் கூட்டில் வைத்துக் குளவி அந்தப் புழுவைத் தன் வடிவாகச் செய்யும் குளவி புழு நியாயத்தை நிலைநிறுத்துவது தங்கள் சித்தம். அடியேன் பேறு. திருவேங்கடவா!

*'எனக்கெனச் செயல் வேறிலை; இங்கு யாவும்*
*நினக்கெனத் தகும்; உடல்பொருள் ஆவியும் தந்தேன்;*
*மனத்தகத் துள்ள அழுக்கெலாம் மாற்றி, நீ*
*நினைத்தது எப்படி அப்படி அருளுதல் நீதம்'*

என்னும் தாயுமானவர் பாடல் இங்கு ஒப்பிட்டுத் தெளியத்தக்கது.

# வழிகாட்டு வல்ல குருவே!

நாட்டு வைத்தியர் ஒருவர் நோயாளி ஒருவனுக்கு மருந்து கொடுத்தார். காலை மாலை உணவுக்கு முன் அந்த மருந்துத் தூளில் ஒரு சிட்டிகை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு சிறிது தண்ணீர் குடிக்க வேண்டும்' என்று கூறினார். மேலும் மருந்தினை வாயில் போட்டுக்கொள்ளும் போது குரங்கை நினைத்துக் கொள்ளக் கூடாது... இதுதான் பத்தியம்' என்றும் கூறினார். அந்த நோயாளி மறுநாள் காலை உணவுக்கு முன் மருந்தை எடுத்து வாயில் போட்டுக் கொள்ளப் போனார். எதையோ நினைக்கக் கூடாது என்று மருத்துவர் சொன்னாரே' என்று எண்ணிய போது குரங்கின் நினைவு வந்துவிட்டது. இப்படியே ஒவ்வொரு முறையும் மருந்து உண்ணும்போது எதை நினைக்கக் கூடாது என்று மருத்துவர் சொன்னாரோ அதை, அந்தக் குரங்கை நினைத்துக் கொண்டார் அந்த நோயாளி.

இது மனத்தின் இயல்பு. எது கூடாது, நினைக்கக் கூடாது, செய்யக் கூடாது என்று கூறுகிறோமோ அதை நினைக்க, பேச, செய்ய மனம் இயல்பாகச் செயல்படுகிறது. சான்றோர் புலன் அடக்கத்தாலும் தெய்வ அருளாலும் நோன்புகளாலும் நன்னெறியில் நிற்கின்றனர். மற்றவர்களால் அவ்வாறு ஒழுக்கமாக வாழ இயல்வதில்லை—நல்லதை நினை என்றால் கெட்டதை

நினைக்கிறது. நல்லதைக் காண் என்றா கெட்டதைக் காண்கிறது. நல்லதைக் கே என்றால் கெட்டதைக் கேட்கிறது. நல்லதைப் பே என்றால் கெட்டதைப் பேசுகிறது. அதிலிருந் விடுபட, நன்னெறியில் நிற்க ஒரு வழிகாட்டி, ஒ சற்குரு துணை வேண்டும், இறை அருள் வேண்டும் 38-வது வசனத்தில் இது பற்றிய தன் அனு வத்தைக் கூறித் திருவேங்கடவனின் அரு துணையைப் பெரிய திருமாலாசாரியார் வேண் கிறார்.

வேதத்தால் அறியத் தக்கவனே! என் மனப் தியான யோகத்தில் நிற்கும்போது, சண்டாளி கழுதை, பன்றி இயல்புள்ள பெண்கள் மனதில் தோன்றுகின்றனர். பிறகு தியானத்தை விட்டு விட்டுப் புராணம் படிக்கலாம் என்றால் தாடகை, சூர்ப்பநகை, விராதன், கவந்தன், கும்பகர்ணன், இராவணன் முதலியோர் பெயர்கள் என் நாவில் உருள்கின்றன. அதையும் விட்டுவிட்டு ஜெபம் செய்ய எண்ணினால் உறக்கம், கொட்டாவி, களைப்பு, சோம்பேறித்தனம் முதலியன ஒன்றுக்கு ஒன்று போட்டிப் போட்டுக் கொண்டு முந்தி முந்தி வருகின்றன. சரி, இவை எதுவும் வேண்டா' என்று தீர்த்த யாத்திரை மேற்கொண்டால் கொடியோர், கள்வர், புலி, முதலை முதலியன பற்றிய அச்சங்கள் நடுங்க வைக்கின்றன. இப்படிப்பட்ட நிலையில் நான் இருக்கும்போது என் முயற்சிகள் எப்படி நிறைவேறும்? நான் ஒன்றை நினைத்தால் வேறொரு வகையில் உன் மாயை என்னை மயக்கு கிறது. என்ன உபாயத்தால் உன்னை நான் என் வயப்படுத்த வல்லேன். நான் எப்படி உன்னை அடைய வேண்டும் என்று நீதான் எனக்குக்

கற்பிக்க வேண்டும். நீ ஜெகத் குரு. என்னை நீ அறிவாய்! திருவேங்கடவனே!!

கல்லாத அறிவு, மேற் கேளாத கேள்வியும்
கருணைசிறி தேது மில்லாக்
காட்சியும், கொலைகளவு கட்காம் காட்சியும்
காதலித் திடுநெஞ்சமும்,
பொல்லாத பொய்ம்மொழியும், அல்லாது நன்மைகள்
பொருந்து குணம் ஏதுமறியேன்;
புருஷர்வடி வானதே அல்லாது நனவிலும்
புருஷார்த்தம் ஏதும் இல்லேன்;
எல்லாம் அறிந்த நீ அறியாத தன்று; எனக்
கெவ்வண்ணம் உய்வண்ணமோ?
இருளைஇருள் என்றவர்க் கொளிதா ரகம்; பெறு
மெனக்கு நின் அருள் தாரகம்;
வல்லான் எனும்பெயர் உனக்குள்ளதே; இந்த
வஞ்சகனை ஆள நினையாய்
மந்த்ர குருவே! யோக தந்த்ர குருவே மூலன்
மரபில்வரு மௌன குருவே.

என்னும் தாயுமானவர் மனநிலை பெரிய திருமலாசாரியார் மனநிலையோடு ஒத்திருத்தல் காணலாம்.

# உன் அருளாலே உன்தாள் வணங்குவன்!

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்களும் அவ்வுயிராய் அங்கங்கே இருக்கிறான் இறைவன். அன்பாற் கரைந்து கண்ணீர் ஆறுகண்ட புண்ணியர்க்குத் தன்பால் வர அவன் வழிகாட்டுகிறான். இராமனின் அம்புபட்டு வீழ்ந்து பின் தேவ வடிவுற்ற விராதன் உரைப்பதுபோல் வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன அவன் பாதங்கள்; ஓதம் கொள் கடல் அன்றி ஒன்றினோடு ஒன்று ஒவ்வாப் பூதங்கள் தோறும் உறையும் அவனை அவை அறியா! பனி நின்ற பெரும் பிறவிக் கடல் கடக்கும் புனை பற்றி நனி நின்ற சமயங்கள் 'நன்று' என்ன தனி நின்ற தத்துவத்தின் தகை மூர்த்தி அவன்; தாய் தன்னை அறியாத கன்றில்லை, தன் கன்றை ஆயும் அறியும்; உலகின் தாய் நீ; நீ அறிதி எப்பொருளும்; அவை உன் நிலை அறியா? என்ன மாயை ஐயா இது!' என்று கூறி இராமன் திருவடிப் பேற்றால் விராதன் பிறவிப் பெருங்கடலிலிருந்து கரை சேருகிறான். பக்தனின் நிலை இது. அரியர்க்கு எல்லாம் அரியனாய ஆண்டவன் எளியர்க்கு எல்லாம் எளியனாய அடியவனை அவனது பரபக்தியால், நீயே கதி, உன் திருவடியே சரணம் என்று தன் அனன்ய கதித்துவம் உண்மையை உணர்ந்து அவன் அடி பற்றுதலால் அக்கைங்கர்யப் பேறு கிட்டும்.

பதினோராவது வசனத்தில் பெரிய திருமலா சாரியார் இந்தத் தன் பக்திப் பாங்கைப் புலப்படுத்து கிறார்.

'கருடக் கொடி போய்! என்னென்று சொல்வேன் உன் பெருமையை! உன் தொப்பூழ்த் தாமரையில் பிறந்தவனாம் பிரமதேவன். ஆனால் உன் பெருமையை அவன் அறியான். வேதங்கள் பல உன் புகழை எடுத்துப் பேசும். ஆனால், உன் முழு முதல் தோற்றத்தை அவை அறியா. சூரிய சந்திரர்கள் உன் கண்களாம். ஆனால் எல்லையில் லாத உன் சுயம் சோதிப் பிழம்பை அவை அறியா. இந்திராதி தேவர்கள் உன் ஆணைக்கு அடங்கி யோராம், ஒவ்வொரு சமயம் தங்கள் அறியாமை யால் உன்னை எதிர்த்துத் தோற்றுப் போய் உன் திருவடியே அடைக்கலம் என்று வழிபடுவர். நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களும் உன் இயற்கைக் குணங்களாம். ஆனால் உன் இயல்பு இத்தகையது என அவை கூறவல்லன அல்ல. ஆழ்கடல் உன் படுக்கை. ஆனால் உன் குணத்தின் ஆழத்தை அது அறியாது. மாமுனிவர் உன் இயற்கைத் தோற்றத்தைக் காண்பார்களாம். ஆனால் அவர்கள் உன் மாயையைக் கடக்க வல்லார் அல்லர். அசைவன, அசையாதன ஆகியன கொண்ட இந்த பிரபஞ்சம் உன் படைப்பு; ஆனால், உன்னைச் சுட்டி இன்னான், இத்தகையான் எனக் காட்டும் ஆற்றல் அதற்கு இல்லை. என் சக்திதான் எவ்வளவு சிறியது! நான் எவ்வளவு சிறியன்! உன் திருவடியே கதி என்று பற்றியிருக்க நீயே அருள் புரிய வேண்டும்.

# அவன் அணிகளும் அடியவர் வாழ்வே!

திருமால் கருடக் கொடியுடையோன்; இரு பாலும் சங்கு சக்கரம் ஏந்தியவன் இடப்பால் அலர் மேல் மங்கை உரைமார்பன் கௌத்துபம் என்னும் மணிபொலியும் மார்பினன். இவையெல்லாம் எதற் காக அவன் தன் அணியாகக் கொண்டுள்ளான்? அடியவனைக் காப்பதற்காகவே என்று பெரிய திருமலாசாரியார் உணர்கிறார்.

அகலகில்லேன் இறையும் என்று அலர் மேல் மங்கை அவன் மார்பில் உறைகிறாள். குற்றம் குறையுடைய சேதனன் எல்லாக் கல்யாண குணங் களும் முழு நிறைவோடு குடிகொண்டு விளங்கும் திருமால் சன்னிதியை அடையின் அவனுக்கு அவள் அச்சேதனன் பால் அமைந்துள்ள ஏதோ ஒரு நல்ல குணத்தை இறைவனுக்கு எடுத்துக் கூறி அவன் அருள் அந்தச் சேதனனுக்குக் கிடைக்கச் செய்வாள். அதற்காகவே அல்லும் பகலும் எப்போதும் அவன் மார்பிலேயே குடிகொண்டிருக்கிறாள். 'ஆதி மூலமே!' என்று கஜேந்திரன் எழுப்பிய அபயக்குரல் கேட்டுச் சக்கராயுதம் சென்று முதலையின் தலை யைச் சிதைத்து அடியவனைக் காத்தது. அப்படி அடியவரைக் காக்கவே அவன் ஆழி அணிந் துள்ளான்.

இதனால் தான்

''திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழத்
தீவினைகள் போயகல அடியவர்கட்கு என்றும்
அருள்நடந்து இவ்வேழுலகத் தவர்பணிய வானோர்
அமர்ந்தேத்த இருந்தார்...

வென்றிமிகு நரகன் உரமது அழியச் சீறும்
　　விறலாழித் தடக்கையன்; விண்ணவர் கட்கு அன்று
குன்றுகொடு குரைகடலைக் கடைந்து அமுதளிக்கும்
　　குருமணி என் ஆர் அமுதம்...''

என்றெல்லாம் திருமங்கை மன்னர் பாடி இறைவனிடம் குடிகொண்டுள்ள அணிகள் எல்லாம் அடியவர்க்கு அருளவே என்று பாடுகிறார்.

பெரிய திருமலாசாரியர் தம் 10-வது வசனத்தில் இந்த உண்மையைப் பின்வருமாறு கூறுகிறார்.

முரனை அழித்தவனே அஞ்சுபவருக்கு அபயம் தருபவன். சம்சாரம் என்னும் நச்சுப் பாம்புக் கடியிலிருந்து உயிர்களை மீட்பதற்காகவே கருடக் கொடியை அவன் கொண்டுள்ளான். அஞ்ஞான இருளில் அவதியுறும் அடியவர்களைக் காப்பாற்ற நீ சூரிய நாராயணனாகத் திகழ்கிறாய். பாபம் என்னும் முதலைப் பிடியிலிருந்து உயிர்களைக் காப் பாற்ற சக்கரம் ஏந்தியுள்ளாய்! வறுமை என்னும் காட்டுத் தீயிலிருந்து மானுடத்தைக் காப்பாற்ற கங்கையை அளித்த தந்தை நீ! தேவர்கள் துன்பந் துடைக்கும் கற்பகமாம் தெய்வதரு நீ. யோகிகளுக் காக சிந்தாமணி என்னும் கவுத்துவ மணியை மார்பில் அணிந்துள்ளாய். பக்தர்களைக் காக்கத் திருமகளை எப்போதும் மார்பில் இடப்பகுதியில் எழுந்தருளப் பண்ணியுள்ளாய். நின் புகழை என்னென்று புனைந்துரைப்பேன். உன் கல்யாண குணங்களை எத்தனை என்று கணக்கிடுவேன். உன் பெருமையில் என்ன எனக்குத் தெரியும்! எங்கள் சின்னஞ் சிறு வாயால் சிறிதே கூறுகிறோம். கேளாய்த் திருவேங்கடவனே!

# பக்தி உழவன்

மனிதன் கண்ட முதல் தொழில் உழவு; அது முதன்மையான தொழிலும்கூட. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' அல்லவா? இதனால் தான் சொல்லேர் உழவர் வில்லேர் உழ்வர் என்று உழவை முன்னிட்டு உயர்வைக் கூறினர்.

பக்திப் பயிர் வளர்த்த பாங்காளர் ஆழ்வார் அனைவரும். அத்தகு பக்தி உழவனாகத் தன்னை உருவகித்துப் பார்க்கிறார் பெரிய திருமலாசாரியார் தம்முடைய 66-வது வசனத்தில்.

'சுடரொளியே! நான் நடத்தும் என் குடும்ப வாழ்வு பற்றிச் சில சொல்லுகிறேன். செவிமடுப்பாயாக! எங்களுக்கு என்றே பரம்பரைத் தொழில் ஒன்று உள்ளது. எங்கள் மூதாதையர் சம்பாதித்துச் சேர்த்து வைத்த, ஆசாரியர்கள் எழுதிய வேதாந்த விசாரணை என்னும் தொழிலே அது. அதனைப் பன்முறை அகழ்ந்து அகழ்ந்து பல தேசத்து ஸ்ரீ வைணவச் சான்றோர் வகுத்த காருண்யம் என்னும் வாய்க்காலை வெட்டினேன். அதில் வரும் அன்பு நீர் பாய்ச்சி உன் தொண்டாகிய விதைகளை விதைத்து வேளாண்மை மேற்கொண்டேன். உன் அருள் என்னும் செந்நெல் நாற்றுக்களைப் பறித்து நினைவு எனும் நிலத்தில் நட்டு வளர்த்தேன். அது நன்கு பேரின்பமாக விளைந்தது அந்தப் பேரின்பத் தானியங்களை என் மனம் எனும் ஆழ் அறையில்

வைத்துப் பாதுகாத்தேன். அடியார்க்கு அன்பு செய்தல் என்னும் கால்நடைகளை அறத்தோடு வளர்த்தேன். உன் அருள் கிட்டியது. நலமாக உள்ளேன். உன் சாரூப்பியம் கைவரப் பெற்றேன்! திருவேங்கடவா !!

இப்படித் தான் வளர்த்த பக்திப் பயிர் பற்றிப் பெரிய திருமலாசாரியார் பாடிய வசனம் இது.

இப்படியே முத்தர்கள் இயற்றும் வேளாண்மை ஒன்று பற்றித் தாயுமானவரும் பாடியுள்ளார். ஞான உழவர் செய்த வேளாண்மை இதோ :

*காராரும் ஆணவக் காட்டைக் களைந்தறக்*
*கண்டுஅகங் காரம் என்னும்*
*கல்லைப் பிளந்து நெஞ்சக மான பூமிவெளி*
*காணத் திருத்தி மேன்மேல்*
*பாரதி அறியாத மோனமாம் வித்தைப்*
*பதித்துஅன்பு நீராகவே*
*பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்*
*பறவைஅணு காதவண்ணம்*
*நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த*
*நின்னன்பர் கூட்டம்எய்த*
*நினைவின் படிக்குநீ முன்னின்று காண்பதே*
*நின்னருட் பாரம்என்றும்*
*ஆராரும் அறியாத சூதான வெளியில்வெளி*
*யாகின்ற துரியமயமே!*
*அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி*
*ஆனந்த மானபரமே.*

# பிறவியெனும் சூதாட்டத்திலிருந்து காத்தருள்க

வாழ்வைப் பிறவிதோறும் தொடர்ந்துவரும் விளையாட்டாக ஒரு தத்துவ ஞானி எண்ணுகிறார். அதனைச் சூதாட்டமாக உமர்கய்யாம் பாடுகிறார்; உலகம் ஒரு நாடக மேடை; அதில் நடிப்பவர்களே மனிதர்கள்; திரையில் வந்து போவது பிறப்பு இறப்புகள்; இப்படி ஒரு நாடகக் கலைஞன் எழுதுகிறான். இவற்றுக்கு எல்லாம் மூலகாரணம் இறைவன் என்கிறான் ஞானி. விதி என்கிறான் உமர்கய்யாம். இயற்கை என்கிறான் ஷேக்ஸ்பியர் என்னும் அந்த நாடகக் கலைஞன்.

வாழ்க்கை விளையாட்டு, தத்துவ ஞானி தாயுமானவர் பார்வையில் இப்படி அமைகின்றது.

''காரிட்ட ஆணவக் கருவரையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போல
கட்டுண்டு இருந்தஎமை வெளியில்விட்டு அல்லலாம்
காப்பிட்டு அதற்கிசைந்த
பேரிட்டு, மெய்யென்று பேசு பாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை அமுதம் ஊட்டிப்
பெரிய புவனத்திடை போக்குவர வுறுகின்ற
பெரிய விளையாட்டு அமைத் திட்டு
ஏரிட்ட தன்சுருதி மொழிதப்பின் நமனைவிட்டு
இடர்உற உறுக்கி இடர்தீர்த்து

"இரவு பகல் இல்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்து துயில் கொண்மின் என்று
சீரிட்ட உலகன்னை வடிவான எந்தை"

உமர்கய்யாம் வாழ்வை விதி நிகழ்த்தும் ஒரு சூதாட்டமாகக் காட்டுகிறார்.

எல்லாம் இங்கோர் சூதாட்டம்
இரவும் பகலும் மாறாட்டம்
வல்லான் விதியே ஆடும் மகன்
வலியில் மனிதர் கருவிகளாம்
சொல்லா தெங்கும் இழுத்திடுவான்
ஜோடி சேர்ப்பான் வெட்டிடுவான்
செல்லா தாக்கி ஒவ்வொன்றாய்த்
திரும்ப அறையில் விட்டுடுவான்.

நம் பெரிய திருமலாசாரியார் மாயையோடு தான் பெற்ற இந்த உடலை வைத்து ஆடும் வாழ் வாகிய தொடர்ந்து வரும் சூதாட்டம் ஒன்றைக் குறிப்பிட்டு அதில் மாயையை வென்று திருவேங்கடவன் திருவருளுக்குத் தான் பாத்திரம் ஆகவேண்டும் என்று வேண்டுகிறார். பெரிய திருமலாசாரியாருக்கே உரிய அங்கத நடை இங்குச் சிறப்பாக அமைந்து இந்த 67-வது வசனம் முடிகிறது.

"ஆழித் திருக்கையாய்! என் உடல் ஒரு தாயப் பலகை; அதன்கண் அமைந்துள்ள இருபத்து நான்கு தத்துவங்கள் நகர்த்தும் காய்கள். மூச்சுக் காற்று தான் உருட்டும் கட்டை; என் அகப்புற சுவாசங்கள் அதனை இப்படியும் அப்படியுமாய் உருட்டிக் கொண்டே இருக்கின்றன. என் புண்ணிய பாவங்கள் சூதில் நான் வைத்திழக்கும் பந்தயப் பணம். இப்படிப் பிறவிதொறும் சூதாடிக் கொண்டிருக்

கிறேன். நான் உன் மாயையோடு இப்படிப் பல பிறவிகளில் ஆடி ஆடித் தோற்றுப்போய் இன்று இப்பிறவி எடுத்து இதிலும் சூடுபிடித்து அந்த ஆட்டமே ஆடிக்கொண்டிருக்கிறேன். வெற்றி எப்படியோ? எப்பொழுது கிட்டுமோ தெரியாது. என்னை உடையவன் நீ. உன் அடியானாகிய நான் பெறும் வெற்றி என் தலைவனாகிய நீ பெறும் வெற்றியே அல்லவா? என் உடன் இருந்து ஊக்கம் ஊட்டி வெற்றியடையச் செய்வாயாக! திருவேங்கடவா!''

# பத்துடை அடியவர்க்கு எளியவன்!

'உயர்வற உயர்நலம் உடையவன் அவன்; மயர்வற மதிநலம் அருளினவனும் அவனே' அயர்வறும் அமரர்கள் அதிபதியும் அவனே... அத்திரு பரம்பொருள் அடியாரைக் காத்துக் கொடியோரை அழிக்க அவதாரம் செய்கிறான். தவத்தோர்க்கு மகனாய், அருளாளர்க்கு மாணவனாய், காதலர்க்கு நாயகனாய் அன்பர்க்கு நண்பனாய்த் தனக்கே உரிய பரம பதத்திலிருந்து இழிந்து மண்ணுலகில் பிறக்கிறான்.

அவனை மகனாய்ப் பெற்றபேறு கோசலைக்கும் தேவகிக்கும் வாய்த்தது. வளர்க்கும் பேற்றினை யசோதை பெற்றாள். உலகம் உண்ட பெருவாயனை, உலகத் தலைவனை கோசலை சுமந்து பெற்ற சிறப்பைக் கம்ப நாட்டாழ்வார்.

> ——————'கோக்கள் வைகும்
> முற்றத்தான் முதல்தேவி; மூன்று
> உலகும் ஈன்றானை முன்ஈன்றானைப்
> பெற்றத்தால் பெறும் செல்வம், யான்
> பிறத்தலால் துறந்த பெரியாள் என்றான்'

என்று பரதன் வாயிலாகக் குகனுக்குக் கூறும் செய்தியாகக் குறிப்பிடுகின்றார்.

உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது; எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உற்றோமே

ஆவோம் உனக்கே யாம் ஆட்செய்வோம்'' என்று கோபியர்க்கு உரிய எளியனாய் அமைகின்றான். இப்படித் தன் எளிவந்த தன்மையால், அடியாரோடு புரையறக் கலக்கும் கலப்பால் தன் அடியார்க்கு பெருமை பெறுமாறு செய்யும் திருமால் கல்யாண குணத்தை நினைத்து நினைத்து நெஞ்சு நெகிழ் கிறார் 56 வது வசனத்தில் பெரிய திருமலாசாரியார்.

"அரக்கர் குலத்தை அழித்தவனே! அகிலாண்ட கோடி பிரமாண்டங்களை வயிற்றில் வைத்துள்ள உன்னைத் தன் கருவில் தரித்தவள் தேவகி தேவி பிரபஞ்சமாக எங்கும் பரந்துள்ள உன்னைத் தம் அன்பெனும் பிடியுள் அடக்கிப் பிடித்து அனைத்துக் கொண்டனராம் கோபிகள். எங்கும் முகம் கொண்ட உன்னைக் குழந்தைக் கண்ணனாய்க் கையில் எடுத்து முத்தம் கொடுத்தாளாம் யசோதை. பிரபஞ்சத்தை எல்லாம் கடந்து நின்ற உனக்குத் துவராபதியைக் கட்டித் தந்தானாம் விசுவகர்மா எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் உனக்கு தேர் ஓட்டினானாம் தாருகன். எல்லையில்லாத எண்ணற்ற பெயர் கொண்ட உனக்குப் பிள்ளைப் பெயர் ஒன்று இட்டானாம் கர்கன். எண்ணில் மறைமுடிவால் என்றும் காண்டற்கு அரிய உனக்கு கல்வி கற்பித்தானாம் சாந்தீபன். இவையெல்லாம் கேட்க வியப்பாக இருக்கின்றன. இப்படியெல்லாம் நீ செய்ததால் உன் அடியார் உயர்ந்தோர் என்பது அல்லவா தெளிவாகிறது திருவேங்கமுடையானே!''

# எனக்கெனச் செயல் வேறிலை

எனக்கெனச் செயல் வேறிலை
இங்கு யாவும் நின் தனக்கு எனத்தகும்
மனத்தகத்துள அழுக்கெலாம் மாற்றி
நீநினைத்து எப்படி அப்படி அருளுதல்நீதம்

பக்தன் ஆண்டவன் அருளையே நாடி உள்ளான். அவன் உடையவன்; தான் அவன் அடிமை என்று உணர்கிறான். அவன் இட்ட வழக்காகத் தன் வாழ்நாள் அமைவதாக என விழைகிறான். இதற்கிடையில் குடிப்பிறப்பு, குலம், சமுதாயம், மொழி, நாடு, செல்வம், செல்வாக்கு, பதவி, பட்டம் இப்படி எத்தனையோ சூழ்நிலைகள் வந்து அவனது உண்மைத் தன்மையைத் தான் இறைவன் ஒருவனுக்கே அடிமை, அவன் இட்ட வழக்கே தன் வழக்கு'— என்ற நிலையிலிருந்து அவனைத் தடுமாறச் செய்கின்றன. ஆனால் உண்மை பக்தன் வைராக்கிய சித்தத்துடன் இவற்றிலிருந்து இறை அருளால் அவன் திருக்காட்சியால் தன்னை விடுவித்துக் கொண்டு பிறந்த உயிர்ப்பேற்றை, கைங்கர்யச் செல்வத்தை அருளுமாறு வேண்டுகிறான்.

வசனம் 78-இல் பக்தனின் இந்தப் பண்பு விளக்கம் கூறுகிறது.

எல்லையற்ற கல்யாண குணங்கள் உடையவனே! சாதி, குலம், பிறப்பு, ஒழுக்கம், செல்வம், செல்வாக்கு இவை என்னிடம் செருக்கை வளர்க்கின்றன. எனக்கு உன் நல்லறிவின் துணை தேவை.

அவற்றின் வயத்திலிருந்து நான் விடுபட வேண்டும். உலகியல் இப்படி உள்ளது. அடிமைக்கு அகங்காரம் உள்ளது. அப்படி இருக்கலாமா? பேடிக்குக் காம உணர்வு வருமா? கருமமே கண்ணாயினாருக்கு பேராசை இருக்கலாமா? மெலிந்தவனுக்கு ஆற்றல் ஏது? பசித்தால் பத்தும் பறந்து போகும். பசித்த வனுக்குக் கொள்கை ஏது? கோட்பாடு ஏது? சக்தி அற்றவனுக்குப் பொறாமை இருக்கலாமா? இப்படிப் பட்டவர்க்கு எல்லாம் அவர் அவர்களுக்கு ஏற்ற குணங்களை இயல்பாக ஈந்துள்ளாய். இவை எல்லாம் நிலையற்ற அசம்பவ குணங்கள். அதனால் எனக்குக் கவலை இல்லை. உன் திருக்காட்சியை மட்டும் எனக்கு அருள்வாயாக. அதுவே என் தவப் பேறு. எனக்கு நீ தரும் பேரரசு. உன் எண்ணம் எப்படியோ? நீ எப்படி அருள்கிறாயோ அப்படியே ஆருக. என்னுள் இருந்து இயக்குபவன் நீதானே! திருவேங்கடத்தானே!

*அன்றே என்றன் ஆவியும் உடலும்*
*உடைமையும் எல்லாம்*
*குன்றே அனையாய் என்னை*
*ஆட்கொண்ட போதே கொண்டிலையோ*
*இன்றோர் இடையூறு எனக்கும் உண்டோ*
*எண்டோள் முக்கண் எம்மானே*
*நன்றே செய்வாய் பிழைசெய்வாய்*
*நானோ இதற்கு நாயகமே?*

என்னும் மணிவாசகப் பெருமானின் இந்தத் திருவாசகப் பாடல் பெரிய திருமலாசாரியார் மன நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

# உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது!

மனிதனைத் தவிரப் பிற உயிர் எல்லாம் இயற்கை நியதி வழி இயங்குகின்றன. உண்பது, உறங்குவது, ஒழுகுவது எல்லாம் ஓர் இயற்கை அமைப்பிற்குக் கட்டுப்பட்டு. அந்த இயற்கை விதித்த விதியில் நிகழ்கின்றன. அவை மலரும் பருவம், காய்க்கும் பருவம், கனியும் பருவம் எல்லாம் திட்ட மிடப்பட்டுள்ளபடியே நடக்கின்றன. அப்படியே பறவைகள் கூடு கட்டும் பருவம் ஆண் பெண் கூடும் பருவம், முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும் பருவம். இவையெல்லாம் இயற்கை நியதிப்படி நிகழ் கின்றன.

மனிதன் ஒருவன்தான் இயற்கை நியதியைக் கடந்தவனாய். கடைப்பிடிக்காதவனாய், மறுப்ப வனாய், மாற்றுபவனாய் உள்ளான். அவன் விதியை அவனே திட்டமிட்டுக் கொள்ளும் உரிமையை இறைவன் அவனுக்கே அளித்து விட்டான். இறை உணர்வு பெறும், ஆன்மீக தெளிவு பெறும் திறனும் அவனுக்கு இறைவன் அளித்துள்ளான். மனம்போன போக்கில் காம குரோத, லோப, மத, மாச்சர்ய வயப்பட்டுத் தாழ்ந்து போகும் நிலையையும் அவனுக்கே ஒப்படைத்து விட்டார். இந்த மானுட வாழ்வில் தட்டுத் தடுமாறி உண்மையை உணர்ந்து, இறையருள் வேண்டி பக்தி செய்தவரை அவன்

அருள் காத்து அபயமளிக்கிறது. ஆன்றோர் வாழ்வில் எல்லாம் இந்த அருள் பேறு கிடைத்துள்ளது.

திருமங்கை ஆழ்வார் தான் தன் மனம் போல் வாழ்ந்து வாடி வருந்திய முற்கால வாழ்வையும் பின் திருமால் திருவடி தீட்சையால் உய்தி உற்றவாறும் தாம்பாடிய பெரிய திருமொழி முதற்பத்து முதல் பாசுரத்தில் உள்ளம் உருகுமாறு எடுத்துரைக்கின்றார்.

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு
அவர்தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

ஆணவ மலத்தில் இப்படிக் கட்டுண்டு உயிர்களை உய்விக்கும் பொருட்டு அவதாரம் செய்த திருவேங்கடவன் தன்னைத்தன் தான், எனது என்னும் மாயைக் கட்டுக்களிலிருந்து விடுவித்துத் தன்னை அவன் ஆட்கொண்டருளிய அன்புத் திறத்தைப் பேசுகிறது—வசனம் 70.

'அரக்கர் குடி வேர் அறுத்தவனே! நான் பிறவியெடுத்து இளமை என்னும் பருவச் செருக்கில் 'நன்று இது; தீது இது' என்று அறியாமல் மனம் போன போக்கில் போய் இன்பம் பல துய்த்து அதனால் புண்ணியம் பாவங்கள் என்னும் சுழற்சியில் சிக்கி அகப்பட்டுக் கொண்டு தீ வினையேன் ஆகி, அதிலிருந்து விடுபட அறியாதவனாய், ஆற்றல் அற்றவனாய், பட்டியில் அடைக்கப்பட்ட

ஆடு போல, கயிற்றில் கட்டுண்ட குரங்கு போல, மகுடியில் மயங்கி அதன் வயப்பட்ட நாகப் பாம்பு போல செங்காய் உள்ளிருக்கும் புழுவினைப் போல இருந்தேன். அனைத்துலக தலைவனாக நீ இருப்பதால் யானும் உன் அருள் ஆட்சியில் ஓர் உயிர் ஆதலால் உன்னிடம் விண்ணப்பிக்கின்றேன். நான் உனக்கு உகந்தவன். நம் உறவு ஒழிக்க ஒழியாது. நீ எனக்கு அருளல் வேண்டும். உன் அடையாளமாகிய சங்கு சக்கர திருநாம முத்திரையிட்டு உன் அடியனாய் என்னை ஆக்கிக் கொண்டாய். இந்த உன் அருட்பெருங் கருணையை நினைத்து உன்னை எல்லையில்லாது கொண்டாடுவேன். திருவேங்கட முடையானே!

மாயையின் வயப்பட்டு உயிர்படும் அவதியையும் இறுதியில் அது இறைவனின் திருவடியில் அடைக்கலம் பெற்று உய்வதையும் பட்டினத்தார் பாடல் பின்வருமாறு படம் பிடித்துக் காட்டுகிறது. மேலே கண்ட பெத்ததிருமலாசார்யா வேங்கடேச வசனத்திற்கு இது மேலும் விளக்கம் தருவது.

*ஐய! நின் அடைக்கலம்; அடியநின் அடைக்கலம்!*
*மனவழி அலைந்திடும் கனவெனும் வாழ்க்கையும்*
*விழுப்பொருள் அறியா வழுக்குறு மனனும்*
*ஆணவ மலத்துதித்து அளைந்தி னுளைந்திடு*
*நினைவைப் புழுவென தெளிந்திடு சிந்தையும்;*
*படிறும் பாவமும், பழிப்புறு நினைப்பும்,*
*தவறும், அழுக்காறும், இவறுபொய்ச் சாப்பும்,*
*கவடும், பொய்யும், சுவடும் பெருஞ்சினம்*
*இகலும், கொலையும் இரவுறு புன்மையும்*
*பகையும், அச்சமும், துணிவும், பணிப்பும்*
*முக்குண மடமையும், ஐம்பொறி முயக்கமும்*
*இடும்பையும் பிணியும் இடுக்கிய வாழ்க்கையை*
*உயிர்எனும் குருகுவிட்டு ஓடும் குரம்பையை*
*...............*

தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியை
ஐம்புலப் பறவை அடையும்பஞ் சரத்தை
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரத்தை
காசில் பணத்தில் சுழலும்காற் றாடியை

பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத்து அலைப்பக்
கெடுவழி கரைவீசக் கொடுமரக் கலத்தை

நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்
பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
அடிமலர்க் கமலத்துக்கு அபயம்நின் அடைக்கலம்....

# வணங்குதல் என் கடன்;
# வாழ்வித்தல் உன் கடன்!

'நான் உன் அடிமை; உன் அடிமைச்சி; உன் தலைவி; உன் நண்பன்; உன் சீடன். எப்போது எப்படி உன் அருள் எனக்கு வாய்க்குமோ, ஒரு அடிமையைப் போல ஒரு குழந்தையைப் போல, ஒரு தலைவியைப் போல உன் அருட்திருக் காட்சிக்குக் காத்துக் கிடக்கிறேன்! என்று பக்தன் புலம்புவான்.

ஆண்டாள் நாச்சியாரும்

ஒளி வண்ணம் வளைசிந்தை
உறக்கத்தோடு இவையெல்லாம்
எளிமையால் இட்டென்னை
ஈடழியப் போயினவால்
குளிர்அருவி வேங்கடத்து என்
கோவிந்தன் குணம்பாடி
அணியத்த மேகங்காள்
ஆவிகாத்திருப் பேனே'

என அவன் அருளுக்காகக் காத்திருக்கும் கலக்கத்தைப் புலப்படுத்துகிறாள்.

பெரிய திருமலாசாரியாரும் தம் 77-ஆம் வசனத்தில் அவன் அருளுக்காகத்தான் காத்திருக்கும் பல மனோ நிலைகளைக் கற்பார் நெஞ்சம் கசிந்துருகு மாறு உரைக்கிறார்.

துருவனுக்கு அருளிபோய்! எனக்கு எந்த வடிவில் உன் அருள் வாய்க்கப் போகிறதோ! தலைவன்! வருவான் வருவான்! என்று அல்லும் பகலும் கண்ணுறங்காது காத்திருக்கும் தலைவியைப் போல் உன் வருகைக்காகக் காத்திருக்கிறேன். தாய்ப் பாலுக்கு முகம் வைத்துத் தவிக்கும் குழந்தையைப் போல உண்ட உன் மிச்சிலுக்கு நான் ஏங்கிக் கிடக்கிறேன். மாலையில் வயலில் மேய்ந்து வரும் தாய்ப் பசுவை எதிர்நோக்கும் பசுக் கன்றைப் போல உன் கடைக்கண் பார்வைக்குக் காத்திருக் கிறேன். அன்னத்தின் தூவியில் உறங்கும் அரச குமரனைப் போல உன் திருவடித் தாமரையில் படியாய்க் கிடந்து படிந்து வணங்க விழைகின்றேன். இவை என் இயல்புகள். அடைக்கலம் என அடைந் தாரை ஆண்டருள வேண்டும் என்று அறநூல்கள் அனைத்தும் உரைக்கின்றன. நீ தலைவன்! நான் உன் அடைக்கலம், நாடி வந்த உன் அடிமை நான் கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டுத் தருவது உன் பெரு மிதத்திற்கு, தலைமைத் தன்மைக்குக் குறைவு அல்லவா? தானே நீ வழங்க வேண்டும் அல்லவா! என் இதயத்தில் நீ இருப்பதை எப்போதும் உணரு கின்றேன். இனி என்ன கவலை, என் வேண்டு கோள் எல்லாம் ஈடேறும் திருவேங்கடவனே!

# உனக்கே பணிசெய்து கிடப்பன்

சென்றால் குடையாய் இருந்தால் சிங்கா தனமாய், கிடந்தால் பஞ்சனையாய் இப்படி எல்லா மாய் ஆதிசேடன் திருமாலுக்குச் சேவை செய்கிறான். அடியவர் அனைவரும் இப்படி ஏதோ ஒரு திருமால் கைங்கர்யத்திற்கு ஏங்கி நிற்கின்றனர்.

புகழேந்திப் புலவர் தன் நளசரித் திரத்தால் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு எனும் நாற்குணமும் நாற்படையாய்க் கொண்டு தன்னைக் காத்துக் கொள்ளும் பெண் நல்லாள் தமயந்தி என்பார்.

அப்படியே பெரிய திருமலச்சாரியாரும் திருமால் பால் தனக்கிருக்கும் அடிமையாந்தன்மை, அவன் அருளில் தனக்கு இருக்கும் நம்பிக்கை அவன் அற்புத நிகழ்ச்சிகளில் தான் கொண்டுள்ள ஆர்வம் அடக்கம் அன்பு, விநயம் முதலிய தன் குணங்கள் இவற்றையே யானை, குதிரை, தேர், காலாட் படைகளாகக் கொண்டு திருவேங்கடவனுக்கு ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் உறைந்து வழுவிலா அடிமை செய்வேன் என்கிறார் தம் 64-வது வசனத்தில்.

'வாலியைக் கொன்று அரசு இளைய வானர மாகிய சுக்கிரீவனுக்கு அருளியவனே! நான் ஒரு சமயம் உனக்கே நான் அடிமை என்னும் உணர்வில் உன் நால்வகைப் படையுள் ஒன்றான, களிற்றுப்

படை காவலனாய் அதன்மீது வீற்று உலா வருவேன் இன்னொரு சமயம் அகலகில்லேன் இறையும் என்று நானும் நீயும் ஒன்றியிருக்கும் நம்பிக்கை எனும் குதிரையில் ஏறி சவாரி செய்வேன். இன்னொரு சமயம் உன் அவதார அற்புதக் கதைகளில் ஆர்வம் கொண்டு கற்பனைத் தேரில் ஊர்வேன். அதன் பிறகு, அடக்கம், ஒடுக்கம், வினயம் என்னும் உன் திருவடிக்காப்புகளுடன் காலாட்படையாய் உன் உள்ளமறிந்து உன் உகப்புக்காகப் பணிசெய்வேன் இப்படி நாற்குணமும் நாற்படையாய்க் கொண்ட உன் சேவகன் நான். என்பால் என்ன குறையிருந்தா லும் பொறுத்து ஏற்றருள்க. திருவேங்கடவா!

# எனக்கு இங்கு என்னோ அதிகாரம்!

தலையே நீ வணங்காய்! கண் காள் காண்மின் களோ! செவிதான் கேண்மின்களோ! மூக்கே நீ முரலாய்! வாயே வாழ்த்து கண்டாய்! நெஞ்சே நீ நினையாய்! எனத் தன் அகப்புற உடல் உறுப்பு அனைத்தும் இறைவன்பால் ஈடுபட விழைந்தார் திருநாவுக்கரசர்.

'ஆசைபற்றி அறையல் உற்றேன் காசில் கொற்றத்து இராமன் கதை' என்றார் கம்பர் அழகென்பதோர் அழியா அழகுடையானைச் சொல்லால் எடுத்துச் சொல்லிவிட முடியுமா? மனங் கடந்தானை நினைவில்தான் நிறுத்த இயலுமா? நமக்கிங்கு என்ன அதிகாரம்? அவன் அருளில் தானே அவன் தாளை அணுக முடியும், அணுகி வணங்க முடியும்.

இப்படியெல்லாம் பெரிய திருமலாசாரியர் மனம் பலவாறு எண்ணி எண்ணிக் கலங்குகிறது. இறுதியில் உன்னோடு எமக்குள்ள இந்த உறவு ஒழிக்க ஒழியாது? என்று ஆண்டாள் நெஞ்சம் போல் திடங் கொள்கிறது.

பெரிய திருமலாசாரியாரின் இந்த மனப் பக்குவத்தை எடுத்து இயம்புகிறது 4-வது வசனம்.

என் இதய கமலம் சூரிய மண்டலத்தின் நடுவிலுள்ள உன்னையே நோக்கிக் கொண்டிருக்கிறது. அல்லி சந்திரோதயத்தை விழைவது போல என் செவ்வல்லிக் கண்கள் மங்கலமயமான உன் முகநிலவைக் காண ஆர்வமுற்றுள்ளன. கார் மேக வரவைக் கண்டு கான மயில் மகிழ்ந்தாடுவது போல உன் நீல மேக சியாமள வண்ணத்திருமேனி அழகில் ஈடுபட்டு என் மனமாகிய மயில் சிறகு விரித்தாடி மகிழ்கிறது சுவாதி நாளில் விழும் மழைத்துளிக்கு வாய் திறக்கும் முத்துச் சிப்பிகள் போல உன் திருவடி தீர்த்தத்திற்கு என் வாய் இதழ்கள் மலர்கின்றன. மகுடி இசைக்கு மயங்கிப் படம் விரித்து ஆடும் நாகப் பாம்பினைப் போல நின் அற்புத அவதாரக் கதைகளைக் கேட்க என் செவிகள் விழைகின்றன.

நீ பரம் பொருள். நானோ பஞ்ச பூதத்தால் ஆனவன். அது எப்படி இயலுமோ! இந்தப் பஞ்ச பூத உடலுள் நீ குடிகொள். இந்த உறவால் அன்புப் பிணைப்பு ஏற்பட்டுள்ளது. காணாத போதே காதல் பொங்குகிறது என்பர் உலகோர். இவ்வளவே. ஆனால் உன்னைக் காணும் ஆற்றல் என் கண்களுக்கு உண்டோ? என் ஆசையைக் கூறினேன். அவ்வளவே! அதுவே அல்லாமல் உன்மேல் அதிகாரம் செய்யும் உரிமை எனக்கு என்ன இருக்கிறது? திருவேங்கடத்தானே!

'செந்தழலே வந்தழலே செய்திடினும் செங்கமலம்
அந்தரம் சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவல்'
'எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத் தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்'

அவைபோல நின்னையே நோக்கியிருப்பன் என்று பாடும் குலசேகர ஆழ்வார் பாடல்கள் இங்கு நினைவுகூறத் தக்கன.

# உன் புகழ்பாடி உய்வோம்!

'ஊரிலான்; பேரிலான்; உற்றார் பெற்றார் யாருமிலான் பரம்பொருள். ஆனால் உயிர்களை உய்வுக்கும் பொருட்டு ஊரனாய், பேரனாய், திருமேனி பலகொண்டு மண்ணில் அவன் அவதரிக்கின்றான். வேதமும் காணா அந்த முதல்வனை அநுபத்தால் உணர்ந்த ஞானிகள், பக்தர்கள், யோகிகள் அவனுக்கு ஊரிட்டு, பேரிட்டு, திருமேனியிட்டு இதிகாச புராணங்கள் இயற்றியுள்ளனர். அதிலிருந்து பக்தி சிரத்தை உள்ள மானுடர் அவனைப் பற்றி அறிந்து அவனைப் பற்றி உய்கின்றனர். அத்தகு பக்திப் பரவச நிலையில் வசனம் 3 அமைந்துள்ளது.

'அலர்மேல் மங்கை உறை மார்பனே! உன்னைத் தேடிக் காண வல்லோம் அல்லோம். பெரியோரைக் கேட்டு உன் வாழிடம் வைகுண்டம் என்று உன் ஊரை அறிந்து கொண்டோம். விஷ்ணு, வாசு தேவன், நாராயணன் எனக் கேட்டு உன் பெயரை உணர்ந்துகொண்டோம். அடைக்கலம் என்று அறிந்தோரை நீ கைவிடமாட்டாய் என்று கேட்டு உன் கல்யாண குணத்தை அறிந்துகொண்டோம். நீலமேக சியாமள மேனியன் எனக் கேட்டு உன் வண்ணம் அறிந்துகொண்டோம். அலர்மேல் மங்கை உறை மார்பு, கௌஸ்துபம் முதலிய உன் மார்பணி

குடியை அறிந்து கொண்டோம். ‘புருஷோத்தமன்’ என்ற உன் திருப்பெயர் கேட்டபோது ஆண்களில் உத்தமபுருஷன் நீ என்று அறிந்துகொண்டோம். குழலிசை கேட்டு இன்புறுவோன் நீ என்று சொன்ன உடனேயே உன் ஆயர்குடியை அறிந்துகொண் டோம்; மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன முதலிய அவதாரங்களைக் கேட்டு உன் பிறப்பின் பெருமையை, நோக்கத்தை அறிந்துகொண்டோம். வணங்குகின்றோர் அனைவரினும் நீ உயர்ந்தவன் என்று அறிந்து உன்னை வழிபடுகிறோம். இனி உன் புகழையே பாடுவோம்! கொண்டாடுவோம்!! திருவேங்கடவனே!!!

# உன் மாயைக் கட்டிலிருந்து நீதானே காத்தருள வேண்டும்!

'மின்னனைய பொய்யுடலை மெய்யென்றும் மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டு
மின்னார்கள் இன்பமே மெய்யென்றும், வளர்மாட
மேல்வீடு சொர்க்கம்என்றும்
பொன்னையழி யாதுவளர் பொருள்என்று போற்றி,இப்
பொய்வேடம் மிகுதிகாட்டிப்
பொறை யறிவு துறவீதல் ஆதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டு—'

இப்படி எல்லாம் உயிரினை மாயை தன்வயப்படுத்தி மயக்குகிறது. இதிலிருந்து விடுபட இறைவன் திருவருளே துணை— என்பர் தாயுமானவர்.

பெரிய திருமலாசாரியார் வேங்கடேச வசனம் 162-இல் இந்த உண்மையைப் பின்வருமாறு அழகாக தமக்கே உரிய கவித்திறந்தோடும் பக்திப் பாங் கொடும் எடுத்துரைக்கிறார்.

சுவாமி! காந்தமுனை இருபால் இருக்கும் ஊசிகள் இரண்டை ஈர்த்து இணைப்பது போல உன் மாயை ஆண் பெண் இருவரையும் பார்வையால் இணைத்து இயைக்கிறது; அதிலிருந்து தப்புவது எப்படி? கண்ட உடனேயே சிறுவர் நாவில் உமிழ்நீர் உறையச் செய்யும் புளியம் பழத்தால் ஆன தின் பண்டம் போல உன் மாயை நினைத்த உடனேயே மனத்தைப் பொன்னிடத்தும் பொருளிடத்தும்

அடிமைப்படுத்தி விடுகிறது. இதனைத் தடுத்துத் தப்புவது எப்படி? கொள்ளையடித்த பொருளைக் கொள்ளையடித்தவன் கழுத்தில் கட்டி ஊரறிய உலாவரச் செய்வது போல செய்த கர்மவினைக்கு ஏற்ப உயிர்களை அவ்வவ் வினைகளைத் துய்க்கச் செய்வது உன்னுடைய திறனே அல்லவா? இந்த மாயையிலிருந்து உயிர்கள் எப்படித் தப்பக்கூடும். இக்கட்டுகளிலிருந்து விடுபட்டு அவை எப்படிக் கடைத்தேறும். அமிழ்தக் குடம் அருகிலிருக்க அரும் பசியால் அவதி உறுவோர் உண்டா? நீ எனக்காக என் அருகில் இருக்கிறாய். உன் திருவடிகளைத் தொழுது உய்வேன் நான்: திருவேங்கடவனே!

# எல்லையில் புகழோய்!
# நான் என்ன இயம்பவல்லேன்!

‘உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி இலா விளையாட்டு உடையார்—அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே!

என்று திருமாலின் லீலா விபூதியைக் கம்ப நாட்டாழ்வார் அழகாக எடுத்துத் தம் காப்பிய முதற் செய்யுளாய் அமைத்தார்.

கண்ணன் காதலனாய், நண்பனாய், சேவகனாய், காதலியாய், மாணவனாய், சத்குருவாய் அமைந்து விளங்கிய அழகைப் பாரதியார் தம் கண்ணன் பாட்டில் இனிமையாகப் பண்ணமைத்துப் பாடியுள்ளார்.

இப்படி எல்லோர்க்கும் உயர்ந்தவனாய், எல்லோருக்கும் உரியவனாய் அமைந்து விளங்குகின்ற திருவேங்கடவன் புகழ் நம்மால் சொல்லுதற்கு அரிது என வசனம் 154இல் பெரிய திருமலாசாரியார் பாடுகிறார்.

இந்திரன் முதலான தேவர்களால் புகழப் பெறுவோனே! உன் அடைக்கலப் பெருமையை அறிந்தவர் கவுதம முனிவர். உன் பெயரின் புகழை அறிந்தவளாம் பார்வதிதேவி. உன் நாச்சுவை

அறிந்து உனக்கு உணவு படைத்தவன் விதுரன். உன் மனோபாவத்தை அறிந்து அடியவர்களுக்கு புருஷாகாரம் செய்பவள் திருமகள். உன் பேராற்றல் அறிந்தவனாம் வில் வீரனாகிய அருச்சுனன். உன் கலைத்திறன் அனைத்தும் அறிந்ததாம் குழலோசை. உன் மார்பழகை உணர்ந்தனவாம் கௌத்துபம், துளசி, தழைமாலை. உன் விரைவை அறிந்தவனாம் கருடாழ்வான். உன் தோள் வலிமையை அறிந்தனவாம் வில், கதை முதலிய தெய்வப் போர்ப்படைகள். உன் திருமேனி அழகில் மயங்கியவராம் கோபிகைகள். உன் தோள் சிறப்பை அறிந்தவனாம் வாமதேவன். உன் பக்தர்பால் நீ கொண்ட தாயன்மை உணர்ந்தவர்கள் உன் அடியார்கள். உன் ஆக்கலையும் அழித்தலையும் அறிந்தவராம் திவ்விய சூரிகள். பூதகி, இரணியன், இராவணன், கும்பகர்ணன், ஜெயவிஜயர்கள் உன் பொலிவை அறிந்தவர்கள். இத்தகைய உன்னை ஆயிரம் நாவுடைய ஆதிசேடனாலும் புகழ இயலாது. நான் எம் மாத்திரம்! திருவேங்கடமுடையானே!

# அருளாளாய்! நின்னையே அடைந்தேன்!

'உன் தன்னோடு உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியது' என்று பரமாத்மா சீவாத்மா உறவுக்கு சாசனம் செய்தார் ஆண்டாள் பிராட்டியார்.

அந்த உறவு ஒன்பான் வகை தொடர்புகளாக (நவவித சம்பந்தமாக) வைணவச் சான்றோர்கள் நெறிப்படுத்தியுள்ளனர். அவை தந்தை மகவு தொடர்பு, இரட்சிக்கப்படுபவன். இரட்சிப்பவன் தொடர்பு, அடிமை அடிமை ஏற்பவன் தொடர்பு. நாயகன் நாயகி தொடர்பு, அறிபவன் அறிபொருள் தொடர்பு, உடைமை உடையவன் தொடர்பு, சரீரம் சரீரி தொடர்பு, ஆதாரம் ஆதேயத் தொடர்பு, அனுபவிப்பவன் அநுபவிக்கப்படு பொருள் தொடர்பு என்பன ஆகும்.

இவை அனைத்தையும் மனதில் கொண்டதாய், இவற்றுக்கு எல்லாம் தக்க எடுத்துக் காட்டுகள் தருவதாய் அமைந்துள்ளது வசனம் 153.

எல்லையில்லாக் கல்யாண குணச் செல்வ! பக்தர்களை உன் குழந்தையாக நீ பாவிப்பவன். இதில் ஐயம் எதற்கு. அதற்குப் பிரகலாதன் சான்று. 'அடைக்கலம்' என்று உன்னை அடைந்தோரை அவர் எவராயினும் அவர்க்கு அடைக்கலம் தந்து

ஆதரிப்பவன் நீ என்பதில் ஐயம் இல்லை. அதற்குக் காட்டு இராவணன் தம்பி அரக்கர் குலத்தவன் வீடணனுக்கே அடைக்கலம் அளித்தவன் அல்லவா நீ! பாபத்தைப் போக்கிப் புனிதப் படுத்துவோன் நீ என்பது அகல்யைக் கல்லுருவிலிருந்து மனித உருவாக்கி உயிர்ப்பித்தாயே அதுவே தக்க சான்று ஆகும் அல்லவா? உன் வள்ளல் தன்மையில் ஐயம் எதற்கு. 'கண்ணா' என்று கையைத் தூக்கிக் கதறிய பாஞ்சாலியைக் காத்ததே சான்றாகுமே. அல்லல் படுவோர் துயரைத் தன் துயராய்க் கொண்டு தாங்குவோன் நீ என்பதற்கு கஜேந்திரனுக்கு நீ அருளியதே சான்றாகும். பாதுகாப்பின்றி எண்ணற்ற துன்பங்கள் அடைந்த துருவனை நீ காத்து ரட்சித்தது துன்பத்திற்குத் துணை யாவோன் நீ தான் என்பதற்குத் தக்க சான்றாகும் அல்லவா? இவ்வாறு எல்லா வகையாலும் நீ அருள்வதால் உன் பெரும் புகழ் கண்டு நான் உன் திருப் பெயரையே அடைக்கலம் புகுந்தேன். புகல் ஒன்றில்லா அடியேன் நான் திருவேங்கடவனே!'

## அருளாளர!

வைணவ சம்பிரதாயத்தில் ஆசாரியனை முன்னிட்டே ஆண்டவனை வழிபடுதலை மரபாகக் கொண்டுள்ளனர். மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற வழக்கு தொன்று தொட்டு இந்த பாரத மண்ணில் வழங்குதலும் இதனை வலியுறுத்தும். தாய் தன் குழந்தைக்குத் தந்தையைக் காட்டிக் கொடுக்கிறாள். தந்தை தக்க குருவிடம் தன் குழந்தையை ஒப்படைக்கிறான். குருவோ இறைவனிடம் அவனை அழைத்துச் செல்கிறார்.

'லட்சுமிநாதனாகிய திருமாலை முதல்வனாகவும் நாதமுனி யமுனாசாரியார்களை இடையாகவும் கொண்டு தொடர்ந்து வருகின்ற குருபாரம்பரியத்தை வணங்குகிறேன்.

*லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாத, யாமுநமத் யமாம்!*
*அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே, குருபரம்பராம்.*

என்றே வைணவர்கள் தம் வழிபாட்டை குருவழியாகத் தொடங்குவர்.

இத்தகு ஆசாரியர்களுள் முன்னும் பின்னும் சிங்க நோக்காக இடையில் தோன்றி ஸ்ரீ பாஷ்யம், திருமலை ஒழுகு முதலிய விசிஷ்டாத்துவித தத்துவங்களையும் கோயில் வழிபாட்டு நெறிகளையும் வகுத்து எழுபத்து நான்கு சிம்மாசனங்களைத் தோற்றுவித்து வைணவத்தை சமய தத்துவ நிலைகளில் நிலைநாட்டிய எம்பெருமானார் இராமானுஜாசார்யரைச் சிறப்பாக வணங்கி வழிபடுவர்.

பூமன்னு மாது பொருந்திய மார்பன் புகழ் மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந்து உய்ந்தவன் பல்கலையோர்
தாம்மன்ன வந்த இராமாநுஜன் சரணார விந்தம்
நாம் மன்னி வாழ நெஞ்சே! சொல்லுவோம் அவன்
நாமங்களே!

என இறைவனை அடைய இராமாநுஜசாரியர் திருவடியே துணை எனத் தொழுவர் வைணவ பக்தர்கள்.

இங்குப் பெரிய திருமலாசாரியாரும் தம் 129-ஆம் வசனத்தில், ஆசாரியன் வழியே அடியார் திருக் கூட்டத் தொடர்பால் திருவேங்கடவா உன்னை நான் பெறவல்லேன். வேறு எவரும் இவ்வகையில் எனக்கு உதவ வல்லவர் அல்லர் வானைநோக்கி வாழும் பயிர் போல் உன்னையே நோக்கி நான் உள்ளேன்' என்று உரைக்கின்றார்.

'உலக நாதனே! நான் ஞானத்தை எவரிட மாவது கேட்டு அறிந்து கொள்ளலாம் என்றால் வேதியர்கள் சாத்திரம் வழி நிற்பவர்; அதற்குக் கட்டுப்பட்டவர்கள்; இல்லறத்திலோ மனைவி, மக்கள், சுற்றம் எனக் குடும்பப் பாசத்தில் கட்டுண்ட வர். அரசனோ தன் நாட்டு ஆட்சியில் கவனம் செலுத்தி அதிலேயே கட்டுண்டு கிடப்பவன். முதல் அமைச்சர் செயலில் ஈடுபட்டிருப்பவர்கள். துறவியோ தெய்வ இச்சைக்குக் கட்டுப்பட்டவர்கள். இப்படி அவரவர் நெஞ்சங்கள் வினை வழியே செயல் பட்டு நிற்கும். ஆனால் உன் ஒருவனை சேவித் தாலே மற்ற எல்லாம் கைகூடும் என்ற திட நம்பிக்கை அவர்களுக்கு இல்லை. அப்படிப்பட்ட அவர்கள் போதிப்பது என்ன எனக்கு இருக்கிறது? விதை ஒன்று போட்டால் சுரை ஒன்று முளைக்குமா? எல்லாம் உன் செயல். நான் வைணவன். ஆசாரியர் கட்குக் கட்டுப்பட்டு அவர்கள் காட்டும் வழியில் நிற்பவன். அந்த ஆசாரியர்களாகிய அடியவர்கட்கு நீ கட்டுப்பட்டவன். அருள் கூர்ந்து என்னை நோக்குவாயாக! திருவேங்கடத்தானே!'

# கண்ணனையே தொழுது கவலையற்றிருப்பேன்!

கண்ணன் கீதையில் அர்ச்சுன விஷாத யோகம், ஸாங்கிய யோகம், கர்ம யோகம், ஞான தியான யோகம், ஞான விக்ஞான யோகம் எனப் பதினெட்டு வகை யோகங்களை விளக்கிக் கூறி இறுதியில்

'தர்மங்களை எல்லாம் அறவே விட்டு விட்டு என்னையே அடைக்கலம் எனச் சரணடைவாயாக. பாபங்கள் அனைத்திலிருந்தும் உன்னை விடுவிடுப் பேன்''

*ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ!*
*அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி*
*மாசுச :*ll

என்று கீதையைத் தலைக்கட்டுகிறார்.

126-வது வசனத்தில் பெரிய திருமலாசாரியார் இவ்வாறு கர்மம், ஞானம், யோகம் தவம், தானம் எதுவும் திருவேங்கடவன் அருள்பெற உதவ மாட்டா. அவனே கதி என்று அவனுடைய திருவடியில் சரண மடைவதால்தான் அவன் இறைவனுடைய அருள் பெற்று உய்ய இயலும் என்று பாடுகிறார்.

'ஆயர் குலத் திலகமே! திருவேங்கடவா! கர்மத் தால் உன்னைக் காண முயல்வது காரிருளில் கண்ணாடியில் முகம் காண்பது போன்றது. கல்வி ஞானத்தால் உன்னைக் கைப்பற்றுவது கொக்கு

தலையில் வெண்ணை வைத்து அதனைப் பிடிக்க முயல்வது போன்றதாகும் தவ பலத்தால் உன்னை வசப்படுத்த நினைப்பது படம் எடுத்தாடும் நாகப் பாம்பின் தலைமேல் திகழும் நாகரத்தினத்தைப் பறிப்பது போலாகும். உண்ணா நோன்பிருந்து உன்னை அடைய நினைப்பது சேதுபந்தனம் செய்வது போன்ற சிரமமான காரியம் ஆகும். தானம் செய்து உன்னைக் கவரலாம் என்றால் கயிறுகட்டி அதன் வழி ஆகாயத்தை அடைவது போன்றது ஆகும். இப்படிப்பட்ட முயற்சிகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டவன் நீ. பக்தி ஒன்றாலேயே பரபக்தி ஒன்றாலேயே அடையத் தக்கவன் நீ. அப்படி நீயே கதி என்று பரபக்தி செய்து நின்னை அடைந்தோர் பலர் பிரகலாதன், நாரதன், சுகமுனிவன், வீடுமன், வீபீடணன், யானை, சபரி குகன், அக்ரூவர், விதுரன், அனுமன் முதலிய பரம பக்தர்கள் அடைக்கலத்தால் ஆண்டவனை அடைந்தவர் ஆவர். இவர்கள் புகழ் உலகம் பரவியது. எனவே உன் ஒருவனைக் கொண்டே கவலையற்றிருப்போம். திருவேங்கடவா!

இப்படி இறைவனே கதிஎன்று அவன் அருள் பெற்று கவலையற்ற நிலையடைந்த நாவுக்கரச பெருமானின் பின்வரும் பாடல் மேலே கூறிய பெரிய திருமலாசாரியாரின் வசனத்தோடு ஒப்பிட்டு உணரத் தக்கது.

"நாமார்க்கும் குடிஅல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம், நடலை யில்லோம்
ஏமாப்போம், பிணியறியோம்; பணிவோம் அல்லோம்
இன்பமே, எந்நாளும் துன்பம் இல்லை;
தாமார்க்கும், குடியல்லாத் தன்மையான சங்கரன்நற்
சங்க வெண்குழை ஓர்காதில்
கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே.

# எல்லாமாய் எனக்கு நீ இருக்கும்போது ஏக்கம் எதற்கு எனக்கு !

ஆசைக்கோர் அளவில்லை; அகிலமெல் லாங்கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெலவே நினைவர்; அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர்;
நெடுநாள் இருந்தபேரும்
நிலையாக வேயினும் காயகல்பந் தேடி
நெஞ்சு புண் ஆவர்; எல்லாம்
யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவதும் ஆகமுடியும்;
உள்ளதே போதும்நான் நானெனக் குளறியே
யொன்றை விட்டு ஒன்றுபற்றி
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையை அருள்வாய்
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூரண ஆனந்தமே!

**ஆசைவயப்பட்டு, நான் எனது என்னும் அகங்கார மகார வயப்பட்டு உழலும் உயிர்கள் எல்லாம் இறைவனே கதி என்று அவனை அடைந்தால் அவன் அனைத்தும் அருள் வானே! என்று தாயுமானவர் பாடுகின்ற அந்த பக்தி உணர்வு வேங்கடேச வசனங்கள் 125-இல் விளங்கக் காணலாம்.**

'அரக்கன் சுவாகுவை அழித்தவனே! நான் மந்திர சித்தி அடைவதற்கு கழுத்தளவு நீரில் மூழ்கி இருக்கலாம் என்றும், துறவி ஆவதற்குக் காட்டில் தவம் செய்யலாம் என்றும் காயசித்தி பெறுவதற்கு காயகல்பம் முதலிய மருந்துகள் உண்ணலாம் என்றும், சித்தர் கந்தர்வர் நிலை அடைவதற்கு மா பெரும் யோகம் செய்யலாம் என்றும் அனேக வழிகளில் ஆசையால் சுழன்றேன். என் அறிவை என்ன என்று சொல்வேன்! இவை எல்லாம் அஞ்ஞானத்தால் வந்த கட்டுக்கள். இவை முக்தி நெறிக்குப் பயன்படா. சிரஞ்சீவியாய் எத்தனை நாள் வாழ்ந்தாலும் உன் மாயையில் அகப்பட்டுத் துன்பங்களே தொடரும். இவற்றால் எல்லாம் பிரம்ம லோகத்தைக் கூடத் தாண்ட இயலாது. இதற்காக இவ்வளவு செயல்கள் ஏன் செய்தல் வேண்டும்? பின்பு உன் அருளால் உண்மை ஞானம் கைவரப் பெற்றேன். உன்னையே தொழுது நீயே கதி என்று கிடக்கலானேன். நின் விருப்பம் எதுவோ அப்படியே ஆகுக. திருவேங்கடவா!

# குற்றம் தவிர்த்துக் குணங்கொண்டு அருள்வோய்!

இந்த மானுடப் பிறவி 'வினையின் வழி வந்தது; வினைக்கு விளைவாவது' மனித முயற்சியால் இந்தக் கர்மக் கட்டிலிருந்து, உலக மாயையிலிருந்து, பிறப்பு இறப்புச் சுழற்சியிலிருந்து விடுபட இயலாது; அவன் அருளால் அவன் தாள் அடைந்தே இவற்றிலிருந்து விடுபட முடியும், வீடு பேறுகிட்டும்.

ஆண்டாள் தன் பாவையில் இந்த இறையருள் திறனை, உயிரைப் பற்றி வரும் வினைக்கட்டு களிலிருந்து விடுபடும் வழியை நமக்கு உபதேசிக்கிறாள்.

*''மாயனை மன்னு வடமதுரை மைந்தனை*
*தூய பெருநீர் யமுனைத் துறைவனை*
*ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை*
*தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை*
*தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது*
*வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க*
*போய பிழையும் புகுதருவான் நின்றனவும்*
*தீயினில் தூசாகும்...*

திருப்பாவை-5

பெரிய திருமலாசாரியார் இந்த 28வது வசனத்தில் திருவேங்கடவன் திருமுன் தன் குறையை விண்ணப்பித்து அவன் அருள் தன்னைக் காக்கும்

என்று அவனிடம் உள்ள தன் அசையாத நம்பிக்கையை விண்ணப்பித்துக் கொள்கிறார் அடியார் குற்றங்களையும் குணமாய்க் கொள்ளும் திருவேங்கடவனின் கல்யாண குணப்பெருமை இங்குப் பேசப் பெறுகிறது.

'உயர்வற உயர்நலம் உடையோனே! நான் தீயோன் என்றுபிறர் எவரேனும் உன்னிடம் என்னைப் பற்றிப் புறங் கூறுவாரோ? உன் முன் இப்பொழுதே என் குற்றங்களை நானே எடுத்துரைத்து விடுகிறேன். மன்னிக்குமாறு மன்றாடுகிறேன். நின் கண்ணில்படாமல் ஒதுங்கிக் கொள்கிறேன். எப்படியும் நான் செய்த பாவங்கள் என்னைச் சூழும் போது உன் நாமம் ஓதி அவற்றிலிருந்து தப்பித்துக் கொள்வேன். உன் மாயையால் என்னுள் எழும் காமம், வெகுளி, மயக்கம் முதலியவற்றின் பாதிப்புக்களிலிருந்து தப்பிக்க உன்னை என் நெஞ்சுள் நிறுத்தி நினைந்துக் கொள்வேன். முன் செய்த தீவினைகள் விடாது மூண்டெழுந்து பற்றினால் உன்னைப் பற்றிக் கொண்டு அவற்றை அப்பால் ஒதுக்கித் தள்ளி விடுவேன். யம தூதர்கள் என்னை அணுகினால் என் மேனியிலுள்ள உன் சங்கு சக்கரக் குறிகளைக் காட்டி அவர்களை மிரட்டி வெருட்டி விடுவேன். உலகப் பாசங்கள் என்னை மயக்க வரும் போது உன் அற்புதக் கதைகளைக் கேட்டு விழிப்படைவேன். உன் மாயை என்னை மூழ்கடித்தால் உன் அடியவரிடம் சொல்லி உனக்கு விண்ணப்பிப்பேன். குற்றங்களை நெஞ்சில் கொள்ளாது என் குணங்களையே கொள்வாயாக! திருவேங்கடவனே!'

# குற்றம் இழைத்தல் என் இயல்பு; குணமாய்க் கொள்ளல் உன் அருள்!

எங்கும் இறைவன் உளன்; என்றும் இறைவன் உளன். அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாச மாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைத் துள்ளவன் அவன். அவன் உள்ளும் புறமும் எங்கும் கரந்தும் பரந்தும் இருக்கும் இருப்பை நம்மாழ்வார்:

திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுதுமாய் அவையவை தொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவைஉண்ட சுரனே

இத்தகு இறைவன் அயர்வறும் அமரர்கள் அதிபதி. அவனை மறைத்து, அவனுக்குத் தெரி யாமல் மறைந்து உயிர் எச் செயலும் செய்ய இயலாது. ஆனால் அஞ்ஞான மாயையில் அழுந்திக் கிடக்கும்போது இந்த உண்மையை உணராது உயிர் பிழை பல புரிந்து விடுகிறது. பின் மெய் நின்ற ஞானம் வந்த பின் தன் பொய் ஒழுக்குகளை இறைவன் முன் விண்ணப்பித்து மன்னிப்புக் கோரி அவன் அருளுக்கு ஆளாகிறது. வசனம் 42-இல் உயிரின் இந்த இயல்பு விளக்கம் பெறுகிறது.

'உபேந்திர! நீ என் தலைவனாய் என்னுள் இருக்க நான் தனியன் என்று, உன்னை எண்ணாமல்

சம்சார சாகரத்தில் மூழ்கிக் குழந்தை குட்டிகளைப் பெற்றெடுத்தேன். அது மட்டுமன்றித் தலைவனாகிய நீ எப்போதும் என்னைப் பார்த்துக் கொண்டிருக்க எவர் கண்ணுக்கும் தெரியாது என்று எண்ணற்ற குற்றம் பல புரிந்தேன். மேலும் நீ என் தோழனாய், என்னைக் காப்பவனாய் எப்போதும் என்னோடு இருப்பதை மறந்து நான் தனியன் என்று கருதி பேய் பிசாசுகளுக்கு அஞ்சி நடுங்கினேன். அன்றியும் என் மனமாய், ஐம் புலனாய், பொறிகளாய் இருப்பவன் நீயே என்று உணராமல் மஞ்சத்தில் இன்புற்றேன். தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற நீங்கள் தரும் அருட் பாலுக்கு நாணி மலம், சிறுநீர் கழித்தேன். எண்ணிப் பார்த்தால் நான் செய்த குற்றங்கள் எண்ணற்றன. என்னை மன்னித்து அருள வேண்டும். திருவேங்கடவா!'

# நீரளவே ஆகுமாம் நீராம்பல்!

'குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா! கேசவா! நீ துறவிகளுக்கு வீடுபேறளிப்பவனாய் விளங்கு கிறாய். இல்லறத்தார்க்கு குடும்பத்தவனாய் (இராதா ருக்மணியோடு) காட்சி தருவாய். உன்னை உள்ளத்தே உள்ளுவோர்க்கு அவர்தம் உள்ளத்தே உறைவாய். பிறர்க்கு மூவருள் ஒருவனாய் ஒளிர்வாய். மூடர்களுக்கு அறியப்படாத வனாய் இருப்பாய். அரக்கர்களுக்கு அகங்கார வடிவனாய் நீ அமைவாய். தேவர்களுக்கோ பிரம் பதம் வழங்கும் வள்ளல் நீ. இப்படி அவரவர்க்கு ஏற்ற வகையில் நீரளவே ஆகும் நீராம்பல் போல நீ அமைவாய். கொண்டவர் கொள்ளும் அளவு அவர் பெற்றபேறு. உன்னை அடைக்கலம் என்று அடைந்தோரை என்றும் கை விடாது காப்பாய். குறை ஒன்றும் இல்லாக் கோவிந்தன் நீ! திருவேங்கடவா!

*அவரவர் தமதமது அறிவறி வகைவகை*
*அவரவர் விதிவழி அடைய நின்றனரே!'*

என்னும்

நம்மாழ்வார் முதல் திருவாய்மொழிப் பாசுரம் நினைவு கூரத் தக்கது.

# உன்னையன்றி உண்டோ வேறு ஒன்று!

புண்ணியத்தின் புண்ணியம் இறைவன். யார் என்ன புண்ணியம் செய்தாலும் சென்று சேர்வது திருமாலிடமே. வசனம் 128.

'பூதகியைத் தண்டித்தவனே! கிரகண காலத்தில் ஆடும் நீர்முழுக்கு கங்கையில் நீராடலுக்கு நிகராகும் என்பர். புண்ணியத் தலத்தில் வாழ்பவர் முனிவர்க்கு நிகராவர் என்பர். நல்லோர்க் கையில் இட்ட பொன் மகாமேரு போல் உயர்ந்தது என்பர். உரிய காலத்தில் செய்யும் அனுட்டானங்களின் பயன் மிகப் பெரிது என்பர். ஆனால் அனைத்து மகிமையும் உன்னிடமே உள்ளன. கங்கை நீர் உன் திருவடி தீர்த்தம். உன் அடிமைத் திறமே துறவின் பெருமை. தானமாக வழங்கியன அனைத்தும் திருமகள் பிரசாதம். ஜப தப அனுட்டான பலாபலன் அனைத்தும் உன் நாமத்தை உச்சரிப்பதால் கைகூடும். உன்னால் இவை எல்லாம் பெற்றேன்; நிறைவுற்றேன். வெண்ணை கையில் இருக்க நெய்க்கு அலைவார் உண்டோ? பரிசவேதி வீட்டிலிருக்க பொன்னுக்கு அலைவது ஏன்? எல்லாமாய் எங்களுக்கு நீ உள்ளாய். மைதிலி மணவாளா! திருவேங்கடவா!

"எந்நாள் எம்பெருமான் உன்தனக்கு அடியோம்
என்று எழுதப்பட்ட
அந்நாளே அடியோங்கள் அடிக்குடில் வீடுபெற்று
உய்ந்தது காண்"

—பெரியாழ்வார்

